# கண்ணாடியாய் இருங்கள்!

ஆசிரியர்

**Dr. M.M. அப்துல் காதிர் உமரீ** H.H.A., M.D., (Acu).,

PUBLICATIONS

**ZERO PUBLICATIONS**

**ஜீரோ பப்ளிகேஷன்ஸ்**

19, வினாயகமூர்த்தி தெரு, சாத்தமங்கலம், மதுரை – 625020.

Ph: 0452-2527421, 93440-96221, 93609-24499, 93606-26292.

# KANNADIYA IRUNGAL - Tamil


- Compiled by:
  **A.S. FATHIMA ABDUL KADIR UMARI**
- Subject : About Muslim Personality
- First Edition : July 2009
- Size of the book : Crown 1/8
- Pages : 64
- Number of Copies : 3000
- Price : Rs 15.00
- Type Setting and Design by:
  **SAFA Graphics,** Madurai. Ph: 0452-2527421, 93440-96221,
- Published by:
  **ZERO PUBLICATION**
  19 (34), Vinayagamoorthi St, Sathamangalam, Madurai. 625020.
  Contact: 0452-257421, 93440-96221, 93609-24499, 93606-26292.



ஆசிரியர்

**Dr. M.M. அப்துல் காதிர் உமரீ** H.H.A., M.D., (Acu).,

ஸஃபா இஸ்லாமிய ஆய்வு மையம், இந்தியா.



**© ZERO PUBLICATIONS**

All rights reserved. No part of this publication may be reproduced or transmitted in any form or any information storage or retrieval system, without permission in writing from the Publisher and Author.

# பதிப்புரை

*இறைநம்பிக்கையாளனுக்கு ஒரு தனித்துவம் வேண்டும். இஸ்லாமிய பண்புகளை அவன் தாங்கியிருக்க வேண்டும். இஸ்லாமிய சிந்தைனைவாதி எனத் தன்னைப் பிரகடனப் படுத்துவோரிடம்கூட இப்பண்புகள் தேடப்படும் சூழல் இன்று நிலவுகிறது.*

*பிறர் குறையைத் துருவுதல், சந்தேகம் கொள்ளுதல், ஒருவரோடு ஒருவர் சண்டையிட்டுக் கொள்ளுதல், பிறரை இழிவுபடுத்துதல், பகைமை கொள்ளுதல் இறை நம்பிக்கையாளனுக்கு ஆகாச் செயல்கள். புறம்கூறுதல் இறந்துபோன தன் சகோதரனின் மாமிசத்தை உண்பதாகும் எனத் திருக்குர்ஆன் எச்சரிக்கிறது. இறைத்தூதர் முஹம்மத் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களும் வன்மையாகக் கண்டித்ததோடு இவர்களுக்கான தண்டனை குறித்தும் எச்சரித்துள்ளார்கள். இறந்தவர்களைக் கூட இவர்கள் விட்டுவைப்பதில்லை. இறந்தவர்களை ஏசாதீர்கள் என்ற இறைத்தூதரின் எச்சரிக்கையை மறந்துவிட்டார்களா, மறுத்துவிட்டார்களா எனத் தெரியவில்லை.*

*"இறைநம்பிக்கையாளன் இன்னொரு இறைநம்பிக்கையாளனுக்கு கண்ணாடி" என்ற இறைத்தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் அறிவுரைக்கு தமக்கே உரிய பானியில் விரிவுரை அளித்துள்ளார் இந்நூலின் ஆசிரியர் மவ்லவீ எம்.எம். அப்துல் காதிர் உமரீ. வாசக அன்பர்களுக்கு ஒரு வழிகாட்டியாய் இந்நூல் அமைந்திட வல்ல இறைவனிடம் பிரார்த்தித்து ஆசிரியர் அவர்களுக்கு நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.*

**பதிப்பாசிரியர்**

# முன்னுரை

*புகழனைத்தும் ஏக இறைவனுக்கே!*

*அவன்தான் நம்மைப்படைத்தான் நாம் அவனுடைய அடிமைகள்; நமக்குள் சகோதரர்கள். இனம், மொழி, தேசம், நிறம் என்ற பாகுபாடுகளுக்கு அப்பாற்பட்டு நம் குணத்தைச் சீரமைக்கும் பக்குவத்தை இறைவன் நமக்குத் தந்தருள்வானாக!*

***'கண்ணாடியாய் இருங்கள்'*** *என்னும் இச்சிறு நூல் ஒரு மாற்றத்தைத் தரவேண்டும் என்ற உயர்ந்த நோக்கத்தில் எழுதப்பட்டுள்ளது. தனி மனிதன் சமூகத்தோடு உறவாடும்போது நடந்து கொள்ளவேண்டிய விதம் குறித்து இதில் பேசப்பட்டுள்ளது.*

*இறைத்தூதர் முஹம்மத் ஸல்லல்லலாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு* ***'ஜவாமிவுல் கலிம்'*** *என்ற ஓர் அழகிய பெயர் உண்டு. வார்த்தைகளை ஒருங்கிணைத்து இரத்தினச் சுருக்கமாகப் பேசுபவர் என்பது இதன் பொருள். "இறைநம்பிக்கையாளன் இறைநம்பிக்கை யாளனுக்குக் கண்ணாடி" என இறைத்தூதர் ஸல்லல் லலாஹு அலைஹி வஸல்லம் மொழிந்த ஹதீஸின் விரிவுரையாய் இந்நூலைத் தொகுத்துள்ளேன்.*

*இந்த ஒரு ஹதீஸில் மனிதன் தன் பண்புகளைச் சீரமைக்கும் அனைத்து விஷயங்களும் அடங்கியுள்ளன. இறைத்தூதர் ஸல்லல்லலாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் இந்த அறிவுரைப்படி மனிதன் வாழமுற்பட்டால் பகைமை, குரோதம், வஞ்சகம், சுயநலம், பொறாமை,*

*பொய் முதலிய தீயபண்புகள் அனைத்தும் நீங்கி உலகம் அமைதிப் பூங்காவாக மாறிவிடும். அப்படி ஒரு மாற்றத்திற்கு வாசகர்களால் முடிந்த பங்களிப்பை அளிக்க வேண்டுகிறேன்.*

*இஸ்லாமிய செய்திகளைத் தொகுத்தளிப்போர் சாதனை படைப்பதில்லை; தங்களின் கடமையைச் செய்கிறார்கள். எனவே நூலைப் படிப்பவர்கள் பாராட்டுவதைக் குறிக்கோளாய்க் கொள்ளாமல். படித்த விஷயங்களைச் செயல் வடிவம் பெறச்செய்வதும், சீரியமாற்றங்களை ஏற்படுத்துவதுமே உண்மையில் எமக்கு மங்காத மகிழ்ச்சியைத் அளிக்கும் என்பதை மனமுவந்து வாசக அன்பர்களுக்குத் தெரிவிக்கிறேன்.*

*இந்நூலை வெளியிடும் அஹத் பதிப்பகத்தாருக்கு நன்றி தெரிவித்துக் கொள்வதோடு இன்னும் பல அரிய ஆக்கங்களை அவர்கள் வெளியிட இறைவனைப் பிரார்த்திக்கிறேன். எங்களின் மறுமை வாழ்வு சிறக்க இறைவனைப் பிரார்த்திக்குமாறு வாசக அன்பர்களைக் கேட்டுக் கொள்கிறேன்.*

*மதுரை* — *அன்புடன்*

*05.07.2009*

**Dr. M.M. அப்துல் காதிர் உமரீ**
H.H.A., M.D., (Acu).,
***அலைப்பேசி: 93440-96221***

## பொருளடக்கம்...

## கண்ணாடியாய் இருங்கள்!

*கணவன் தன் மனைவிக்குக் கண்ணாடி!*
*மனைவி தன் கணவனுக்குக் கண்ணாடி!*
*பெற்றோர் தம் பிள்ளைகளுக்குக் கண்ணாடி!*
*பிள்ளைகள் தம் பெற்றோருக்குக் கண்ணாடி!*
*சகோதரன் தன் சகோதரனுக்கும், சகோதரிக்கும் கண்ணாடி!*
*சகோதரி தன் சகோதரிக்கும், சகோதரனுக்கும் கண்ணாடி!*
*தோழன் தன் தோழனுக்கும், தோழிக்கும் கண்ணாடி!*
*தோழி தன் தோழிக்கும், தோழனுக்கும் கண்ணாடி!*
*இறைநம்பிக்கையாளன் இறைநம்பிக்கையாளனுக்குக் கண்ணாடி!*

*நீங்கள் ஒருவருக்கொருவர் கண்ணாடி போலச் செயல் படும்போது பொறாமை, பகைமை, வஞ்சகம், வெறுப்பு விருப்பிற்கு அப்பாற்பட்ட வாழ்க்கையை உங்களால் வாழ முடியும். இந்த உலகம் உங்களுக்கு அமைதிப் பூங்காவாக மாறிவிடும். நிம்மதியைத் தேடி வாழ்க்கை முழுவதும் நீங்கள் ஓடிக்கொண்டிருக்க வேண்டியதில்லை. மன அழுத்தம், வருத்தம், வாழ்க்கையில் ஒருவிதமான வெறுப்பு உங்களுக்கு ஏற்படாது. நீங்கள் பிறருக்காக வாழக் கற்றுக் கொள்வீர்கள். பிறரையும் உங்களுக்காக வாழவைப்பீர்கள். உலக வாழ்க்கையில் நீங்கள் தனித்த வராக வாழவே முடியாது. மனித சமூகத்தோடு ஒன்றித் தான் நீங்கள் வாழ்ந்தாக வேண்டும். எனவேதான் நீங்கள் பிறருக்காக வாழவேண்டிய, பிறரும் உங்களுக்காக வாழவேண்டிய நிர்ப்பந்தம் ஏற்படுகிறது.*

*உங்களின் வாழ்க்கை இறைவனின் உவப்பிற்கு உட்பட்டதாய் இருக்கவேண்டும். இறைவனின் வெறுப்பிற்கு உந்தப்பட்டதாய் அமைந்துவிடக் கூடாது. நீங்கள் இறைவழிகாட்டுதலுக்கு உட்பட்டு வாழும்போதுதான் உங்களால் மனித சமூகத்திற்குக் கண்ணாடியாய் இருக்கமுடியும். இல்லையென்றால் உடைந்து ஒளி இழந்த கண்ணாடித் துகள்களாய் ஆகிவிடுவீர்கள். அது உங்களுக்கு எவ்விதப் பலனையும் அளிக்காது; உங்களால் சமூகத்திற்கும் பலன் அளிக்கமுடியாது.*

*“இறைநம்பிக்கையாளன் மற்றோர் இறைநம்பிக்கையாளனுக்கு கண்ணாடியாவன்” என இறைத்தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் கூறினார்கள்.*

***அறிவித்தவர்: அபூ ஹுரைரா(ரலி) நூல்: அபூ தாவூத்***

*இந்த உவமைப்படி கண்ணாடிக்கு முன்பு நின்று உங்களையே நீங்கள் உற்றுப் பாருங்கள் அது உங்களுக்கு பலவாறு அறிவுரை வழங்கும்.*

## உண்மையாளராய் இருங்கள்

*நீங்கள் இப்போது கண்ணாடிக்கு முன்னால் நின்றிருக்கிறீர்கள். அது உங்களிடம் உரையாடுகிறது. உங்களிடம் மட்டும்தான் உரையாடுகிறது. உங்கள் தொடர்பான உண்மைகளை வைத்தே உரையாடுகிறது. உங்களிடம் அது பொய்யுரைக்கவில்லை. நீங்கள் உங்கள் முகத்தைக் காட்டுகிறீர்கள். அது உங்கள் முகம் என்றே சொல்கிறது. உங்கள் உடலின் வலப்பக்கத்தை நீங்கள் காட்டினால் அது இடப்பக்கத்தை உங்களிடம் காட்டாது. உங்கள் முகத்திலோ, உடலிலோ அல்லது ஆடையிலோ உள்ள குறையைச் சுட்டுகிறது. நீங்கள் அழகிய அலங்காரத்துடன் இருப்பின் அதையும் சரியாகச் சுட்டுகிறது.*

அதேபோல் நீங்களும் உங்களின் சகோதரருக்குக் கண்ணாடியாய் இருங்கள்! அவரிடம் நீங்கள் காணும் நிறைகுறை குறித்த கலப்பற்ற உண்மையைச் சொல்லுங்கள். அவரிடம் நீங்கள் காணும் குறையை மனதில் புதைத்து வருத்தத்துடன் வாழாதீர்கள். அவரைக் காணும் போதெல்லாம் அந்தக் குறை உங்கள் ஞாபகத்திற்கு வரக்கூடாது. நேரடியாக உண்மையை எடுத்துரைத்து குறைக்கு முற்றுப்புள்ளியிடுங்கள்.

உங்களின் சகோதரரிடம் நிறை இருப்பின் பாராட்டுங்கள். ஆனால் வரம்பு மீறி புகழ்ந்து தள்ளாதீர்கள்.

ஒருவர் இன்னொரு மனிதரை அளவு கடந்து புகழ்ந்து கொண்டிருந்ததைச் செவியுற்றபோது, "அந்த மனிதரின் முதுகை 'அழித்துவிட்டீர்' என்றோ 'ஒடித்து விட்டீர்" என்றோ (கடிந்து) இறைத்தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் கூறினார்கள்.

***அறிவித்தவர்: அபூ மூஸா(ரலி)***
***நூல்: ஸஹீஹ் அல் புகாரீ, ஹதீஸ் எண்: 6060***

ஒரு மனிதர் குறித்து இறைத்தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு அருகில் பேசப்பட்ட போது ஒருவர் அவர் குறித்து புகழ்ந்துரைத்தார். உடனே, "உனக்குக் கேடுதான். உம் தோழரின் கழுத்தை நீர் துண்டித்து விட்டீரே!" என இறைத்தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் பல முறை கூறினார்கள். பிறகு,

"உங்களில் ஒருவர் (தம் சகோதரரைப்) புகழ்ந்தேயாக வேண்டும் என்றிருந்தால், '(அவர் குறித்து) நான் இன்னின்ன விதமாக எண்ணுகிறேன்' என்று (மட்டும்) கூறட்டும். அதுவும் அவர் அவ்வாறு இருப்பதாகக் கருதினால் மட்டுமே கூறட்டும். அல்லாஹ்வே அவரைக்

*குறித்து விசாரணை (செய்து முடிவு) செய்பவனாய் இருக்கிறான். அல்லாஹ்வை முந்திக் கொண்டு யாரையும் தூய்மையானவர் என்று (யாரும்) கூற வேண்டாம்" என இறைத்தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் கூறினார்கள்.*

*மற்றோர் அறிவிப்பில்,"(தம்முன் புகழ்ந்தவரைப் பார்த்து) உனக்கு அழிவுதான்" என இறைத்தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் கூறினார்கள் என உள்ளது.*

***அறிவித்தவர்: அபூ பக்ரா நுஃபைவு இப்னு ஹாரிஸ்(ரலி)***
***நூல்: ஸஹீஹ் அல் புகாரீ, ஹதீஸ் எண்: 6061***

*குறையை சம்பந்தப்பட்டவரிடமும் நிறையைப் பிறரிடமும் சொல்லக் கற்றுக் கொள்ளுங்கள். உங்களின் சகோதரரும் உங்களுக்குக் கண்ணாடி என்பதை மறந்துவிடாதீர்கள். நீங்கள் அவருடன் நடந்து கொள்ளும் முறைப்படிதான் அவர் உங்களுடன் நடந்து கொள்வார் என்பதை கவனத்தில் வையுங்கள்.*

*தான்தோன்றித்தனமாகப் பேசினால், ஒரு வார்த்தை வெல்லும் ஒரு வார்த்தை கொல்லும் என்பார்கள். உங்களின் சகோதரரிடம் உண்மையை மட்டுமே பேசுங்கள். பொய்யை அடியோடு அழித்துவிடுங்கள்.*

*பொய் பெரும் பாவங்களின் ஆணிவேராகும். நீங்கள் ஒரு பொய்யுரைத்தால் அதை மறைப்பதற்கு பல பொய் கள் சொல்லவேண்டிய நிர்ப்பந்தம் ஏற்படும். இறுதியில் நீங்கள் பெரும் பொய்யராகவே மாறிவிடுவீர்கள்.*

*உண்மையும் பொய்யும் கலந்து பேசும் பண்போ, பொய்யுரைக்கும் பண்போ உங்களிடம் இருக்கக்கூடாது.*

*நீங்கள் அறிந்துகொண்டே சத்தியத்தை அசத்தியத்தோடு*

*கலக்காதீர்கள்; சத்தியத்தை மறைக்கவும் செய்யாதீர்கள்.*

**திருக்குர்ஆன் 2:42**

*உண்மையில் நிலைத்திருங்கள். ஏனெனில், உண்மை நன்மையின் பக்கம் கொண்டு செல்கிறது. நன்மை, சுவர்க்கத்திற்குக் கொண்டு செல்கிறது. மனிதன் எப் போதும் உண்மையையே பேசிக்கொண்டு உண்மையைத் தேடிக்கொண்டே இருந்தால், அவனை உண்மையாளர் களில் ஒருவனாகவே இறைவன் எழுதுகிறான். பொய் பேசுவது குறித்து உங்களை நான் எச்சரிக்கிறேன். ஏனெனில், பொய் தீயவழியில் கொண்டு செல்கிறது. மேலும், தீயவழி நரகத்திற்குக் கொண்டு செல்கிறது. மனிதன் எப்போதும் பொய்யே பேசிக்கொண்டு பொய்யின் தேட்டத்திலேயே இருந்தால், அவனைப் பொய்யர்களில் ஒருவனாகவே இறைவன் எழுதுகிறான்" என இறைத்தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் கூறினார்கள்.*

**அறிவித்தவர்: இப்னு மஸ்வூத்(ரலி)**

**நூல்:ஸஹீஹ் அல் புகாரீ, ஹதீஸ் எண்: 6094, முஸ்லிம்**

*எச்சரிக்கையாய் இருங்கள்; பிறர் சிரிப்பதற்காகக் கூட பொய்யுரைக்காதீர்கள்!*

*"மக்களைச் சிரிக்க வைப்பதற்காகப் பொய் சொல்ப வனுக்குக் கேடுதான். அவனுக்குக் கேடுதான். அவனுக்கு கேடு தான்" என இறைத்தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் கூறினார்கள்.*

**அறிவித்தவர்: பஹ்ஜ் இப்னு ஹகீம்(ரலி)**

**நூல்: அபூதாவூத், நஸயீ மற்றும் திர்மிதீ**

*எச்சரிக்கையாய் இருங்கள்; நீங்கள் பொய்யுரைத்தால் நயவஞ்சகராகிவிடுவீர்கள்.*

*“நயவஞ்சகனின் அடையாளங்கள் மூன்று 1. அவன் பேசினால் பொய்யே பேசுவான். 2. அவன் வாக்குறுதி கொடுத்தால் மாறு செய்வான். 3. அவனிடம் ஒரு பொருள் அல்லது பணி தொடர்பான பொறுப்பு ஒப்படைக்கப்பட்டால் அதில் மோசடி செய்வான்” என இறைத்தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் கூறினார்கள்.* ***அறிவித்தவர்: அபூ ஹுரைரா(ரலி)***

***நூல்: ஸஹீஹ் அல் புகாரீ ஹதீஸ் எண்: 33, 34, முஸ்லிம்.***

*நீங்கள் பேசும் உண்மை அவரை நல்ல பண்பாளராக மாற்றியமைக்க வேண்டும். அவர் பேசும் உண்மை உங்களை உயர்ந்த பண்பாளராய் ஆக்கவேண்டும்.*

## நேர்மையாளராய் இருங்கள்

*அஞ்சுதல் அஞ்சாமை; இது உங்களின் முதல் பண்பாக இருக்க வேண்டும். உண்மையை எடுத்துரைப்பதில் உங்களின் அஞ்சுதல் இறைவனுக்கு மட்டுமே இருக்க வேண்டும். உங்களின் அஞ்சாமை இறைவனைத் தவிர வேறு யாருக்காவும் இருக்கக்கூடாது. நீங்கள் இறை நம்பிக்கையாளர் என்பதை மறந்துவிடாதீர்கள்.*

*எப்போதும் நேர்மையாளராய் இருங்கள். உள்ளங் கவர்ந்தவரின் குறைகளுக்கும் உங்களுக்கும் இடையில் திரையிடாதீர்கள். அவரின் குறைகளுக்கும் பிறருக்கும் இடையில் திரையிடுங்கள். கண்ணாடிக்கு முன்பாக யார் நின்றாலும் நிற்பவரிடம் காணப்படுகிற குறைகளை அவரிடமே அது சுட்டுகிறது. இவர் வேண்டியவர் வேண்டாதவர் என அது யாரையும் பாகுபடுத்துவ தில்லை. நீங்கள் மனிதர்களுக்குக் கண்ணாடியாய் இருக்கிறீர்கள். நீங்கள் யாரையும் பாகுபடுத்தாதீர்கள்.*

*குற்றவாளிகளின் அதிகாரத்திற்கு பணியாதீர்கள். விருப்புவெறுப்புக்கு இடம் தராதீர்கள். சத்தியத்தில் நிலைத்திருங்கள். இறுதியில் சத்தியமே வெல்லும் என்பதை மறக்காதீர்கள்.*

*அக்கிரமம் புரிபவன் அரசனாய் இருந்தாலும் அவனிடம் அது அக்கிரமம் என்பதை எடுத்துரையுங்கள். அவன் திருந்துவதற்கான வழியைக் காட்டுங்கள்.*

*இறைத்தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் ஜம்ராவின் மீது கல்லெறிந்து கொண்டிருந்தபோது ஒருவர் வந்து, இறைத்தூதர் அவர்களே! கண்ணியமும் மகத்துவமும் மிக்க இறைவனிடம் சிறந்த ஜிஹாத் (அறப்போர்) எது எனக் கேட்டார். இரண்டாம் 'ஜம்ரா' வை அடையும் வரை இறைத்தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் மௌனமாய் இருந்தார்கள். அவர் மறுபடியும் அதே கேள்வியைக் கேட்டார். இறைத்தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் மூன்றாம் 'ஜம்ரா'வை அடையும் வரை மௌனமாய் இருந்தார்கள். மூன்றாம் ஜம்ராவை அடைந்ததும் அவர் அதே கேள்வியை மறுபடியும் கேட்டார். "அதிகாரம் படைத்த அரசனிடம் நீ சத்தியத்தை எடுத்துரைப்பது" என இறைத்தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் பதிலளித்தார்கள்.*

***அறிவித்தவர்: அபூ உமாமா(ரலி)***
***நூல்: அஹ்மத் மற்றும் இப்னு மாஜா***

## நேருக்கு நேர்

*நீங்கள் கண்ணாடிக்கு முன்னால் நிற்கிறீர்கள். அது நேரடியாகவே குறையைச் சொல்கிறது. ஒருவரிடம் குறையைக் கண்டால் அதை நேரடியாகச் சொல்லுங்கள். சுற்றிவழைத்துப் பேசாதீர்கள். நேரடியாக விஷயத்திற்கு*

வந்துவிடுங்கள். காலதாமதத்தைத் தவிருங்கள். எந்நேரத் திலும் எச்சூழலிலும் மனிதனுக்கு மரணம் வரலாம். எனவே, நாளை பார்க்கலாம் என்றால் நான்கு மாதங் களோ நான்காண்டுகளோ ஆகிவிடலாம். நமக்கென்ன வந்தது என்ற அலட்சியத்தில் இருக்காதீர்கள். அலட்சியம் ஆபத்தை உண்டாக்கிவிடும். ஆம், குறையை அறிந்தும் சொல்லாத குற்றத்தில் நீங்களும் தண்டிக்கப்படுவீர்கள்.

திருக்குர்ஆனில் இறைத்தூதர்கள் தங்களுக்கிடையில் கருத்துக்களைப் பரிமாறிக் கொண்டதும் நபித்தோழர் கள் தங்களுக்கிடையில் பேசிக்கொண்டதும் நேருக்கு நேராகத்தான் அமைந்திருந்தது.

## தெளிவாகப் பேசுங்கள்

தனக்கு முன்னால் நிற்பவரின் குறைநிறையை கண்ணா டித் தெளிவாக எடுத்துரைக்கிறது. அரையும் குறையுமாய் அது எடுத்துரைப்பதில்லை. நீங்கள் பிறருக்குக் கண்ணாடியாய் இருக்கிறீர்கள் என்றால் நீங்கள் சொல் வதைத் தெளிவாகச் சொல்லுங்கள். பாதியை மறைத்து மீதியைச் சொல்லும் பழக்கத்திற்கு ஆளாகாதீர்கள்.

இறைநம்பிக்கையாளர்களே! இறைவனை அஞ்சுங்கள்! சொல்வதைத் தெளிவாகச் சொல்லுங்கள்!

**திருக்குர்ஆன் 33:70**

நான்கு வார்த்தைகளில் பேசவேண்டியதை நாற்பது வார்த்தைகளில் பேசாதீர்கள். ஒரு விஷயத்தைச் சொல்வதற்கு பல விஷயங்களை இழுத்து காலத்தை வீணடிக்காதீர்கள். சொல்லவேண்டிய விஷயங்களைத் தெளிவாக நீங்கள் எடுத்துரைத்தால்தான் அது சேரவேண்டிய நபரிடம் சரியாகப் போய்ச் சேரும்.

*இறைத்தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் தெளிவாகவும் இரத்தினச் சுருக்கமாகவும் பேசும் பண்புடையவராய் இருந்தார்கள். அவர்கள் பேசும் வார்த்தைகளை எண்ணிவிடும் அளவிற்கு வார்த்தைப் பிரயோகம் அளவுடன் இருந்தது.*

*இறைத்தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் ஒரு விஷயத்தை பேசியபோது எண்ணக் கூடிய ஒருவர் எண் ணியிருந்தால், ஒன்று விடாமல் எண்ணியிருக்கலாம். (அந்த அளவிற்கு நிறுத்தி, நிதானமாக, தெளிவாய் அவர்கள் பேசி வந்தார்கள்.)* ***அறிவித்தவர்: ஆயிஷா(ரலி)***

***நூல்: ஸஹீஹ் அல் புகாரீ ஹதீஸ் எண்: 3567***

*"நான் எல்லாவற்றையும் (உங்களுக்கு) சமர்ப்பித்து விட்டேனா?" என இறைத்தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் தங்களின் இறுதி ஹஜ்ஜின்போது ஆற்றிய பேருரையின் கடைசியில் மும்முறை கேட்டார்கள்.*

***அறிவித்தவர்: இப்னு உமர்(ரலி) நூல்: ஸஹீஹ் அல் புகாரீ***

*இறைத்தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் ஸலாம் கூறினால் மும்முறை ஸலாம் கூறுவார்கள்; ஏதாவது ஒரு வார்த்தையைப் பேசினால் அதனை மும்முறை திரும்பத் திரும்பக் கூறுவார்கள்.*

***அறிவித்தவர்: அனஸ்(ரலி)***

***நூல்: ஸஹீஹ் அல் புகாரீ ஹதீஸ் எண்: 94***

*இறைத்தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் ஏதா வது ஒரு வார்த்தை பேசினால் அது அவர்களிடமிருந்து நன்கு புரிந்து கொள்ளப்பட வேண்டும் என்பதற்காக மும்முறை அதைத் திரும்பத் திரும்பக் கூறுவார்கள்.*

*ஏதாவது ஒரு சமூகத்தாரிடம் சென்றால் மும்முறை ஸலாம் கூறுவார்கள்.* ***அறிவித்தவர்: அனஸ்(ரலி)***

***நூல்: ஸஹீஹ் அல் புகாரீ ஹதீஸ் எண்: 95***

## தயங்காதீர்கள்

*நீங்கள் கண்ணாடிக்கு முன்னால் நிற்கிறீர்கள். அது உங்களிடம் தயக்கம் காட்டுவதில்லை. உங்களின் சகோதரரிடம் உண்மையை எடுத்துரைப்பதற்குத் தயங்காதீர்கள். உண்மையைத் தைரியமாக எடுத்துரை யுங்கள். உங்களின் சகோதரரிடம் ஒரு தீமையைக் கண்டால் அது தீமை என்பதை அவருக்குப் புரிய வைப்பதில் குறியாய் இருங்கள். மறுபடியும் அவர் அந்தத் தீமையில் விழாதிருக்க வழிகாட்டுங்கள். உங்களிடம் உண்டாகும் தயக்கத்தால் உங்களின் சகோ தரரிடம் தீமை நிரந்தரமாகத் தங்கிவிடுவதற்கான வழிகள் பிறக்கின்றன. மென்மேலும் பல தீமைகள் புரிந்து நன்மை களை இழக்கும் நிலை உருவாகிறது. நீங்கள் நன்மையை ஏவுபவராய் தீமையைத் தடுப்பவராய் இருங்கள்.*

*நீங்கள் சிறந்த சமுதாயமாய் இருக்கிறீர்கள். (ஏனெனில்) நீங்கள் நன்மையை ஏவுகிறீர்கள்; தீயதைவிட்டும் தடுக்கிறீர்கள்; ஏக இறைவனையும் நம்புகிறீர்கள்.*

***திருக்குர்ஆன் 3:110***

## தன்மையாகப் பேசுங்கள்

*உண்மை நிலையை எடுத்துரைப்பதில் கண்ணாடி தயங்கு வதில்லை. கண்ணாடி கூச்சல் போட்டு ஓர் உண்மையை எடுத்துரைப்பதுமில்லை. மென்மையாகவும் தன்மை யாகவும் உண்மை உரைப்பதுதான் கண்ணாடியின் பண்பு. நீங்களும் அவ்வாறே மென்மையாகவும்,*

*தன்மையாகவும் உண்மையை எடுத்துரையுங்கள். கொடியவன் ஃபிர்அவ்னிடம் இறைமார்க்கத்தை எடுத்துரைக்கும் பொறுப்பை இறைவன் மூஸா(அலை), ஹாரூன்(அலை) அவர்களிடம் ஒப்படைத்தபோது சொன்ன அறிவுரையைப் பாருங்கள். ஃபிர்அவ்னிடமே மென்மை காட்டவேண்டும் என்றால் உங்களின் சகோதரரிடம் நீங்கள் எவ்வாறு நடந்து கொள்ள வேண்டும் என்பதைப் புரிந்து கொள்ளுங்கள்.*

*அவனிடம் மென்மையான சொல்லால் நீங்கள் இருவரும் கூறுங்கள்! அவன் நல்லுபதேசம் பெறலாம்; அல்லது அஞ்சலாம்.* ***திருக்குர்ஆன் 20:44***

*இறைவன் உங்களுக்குக் கொடுத்துள்ள அறிவைப் பயன்படுத்துங்கள். உங்களின் சகோதரருக்கு அழகிய முறையில் அறிவுரை கூறுங்கள். பிறரை நீங்கள் அரவணைத்துச் செல்லுங்கள். உண்மையைத்தான் சொல்கிறோம் என்ற பெயரில் விரட்டியடித்து விடாதீர்கள்.*

*உம்முடைய இறைவனின் வழியில் விவேகத்துடனும், அழகிய உபதேசத்தின் மூலமும் அழைப்பீராக! இன்னும், அவர்களிடம் மிக அழகான முறையில் விவாதிப்பீராக! உம்முடைய இறைவனின் வழியை விட்டுத் தவறியவர்களை அவன் நன்கு அறிந்தவனே. நேர்வழி பெற்றவர்களையும் அவன் நன்கறிகிறான்.* ***திருக்குர்ஆன் 16:125***

## நன்மை நாடுங்கள்

*நீங்கள் கண்ணாடிக்கு முன்பு நிற்கிறீர்கள்; எவ்விதப் பலனையும் எதிர்பார்க்காமல் உங்களிடம் காணப்படும் நிறைகுறையை உங்களுக்குச் அது சுட்டுகிறது. பிறரின் நிறைகுறையைச் சுட்டும்போது உலக ஆதாயங்களை*

*நீங்கள் எதிர்பார்க்காதீர்கள். மனிதக் கண்ணாடியான உங்களுக்கு நீங்கள் செய்யும் பணிக்காக இறைவன் மறுமையில் நன்மைகளை அளிக்கிறான் என்பதை கவனத்தில் வையுங்கள். எனவே உங்களின் எதிர் பார்ப்பு மறுமையின் வெற்றியாகத்தான் இருக்கவேண்டும்.*

*நன்மைக்குப் பரிந்துரைப்பவருக்கு அதில் பங்குண்டு; தீமைக்குப் பரிந்துரைப்பவருக்கும் அதில் பங்குண்டு. ஒவ்வொரு பொருளையும் கண்காணிப்பவனாய் இறைவன் இருக்கிறான்.* ***திருக்குர்ஆன் 4:85***

## குத்திக்காட்டாதீர்கள்

*நீங்கள் கண்ணாடிக்கு முன்னால் நிற்கிறீர்கள். அது உங்களிடம் காணப்படும் நிறைகுறையைச் சுட்டுகிறது. அதை நீங்கள் சரி செய்துவிட்டீர்கள். அதன் பின்னர் மறுபடியும் நீங்கள் கண்ணாடி முன்பாக நின்றால் அது உங்களைக் குத்திக் காட்டுவதில்லை. ஒரு சகோதரனின் குறையை நீங்கள் சுட்டிக்காண்பித்தீர்கள். பிறகு அவன் அதைத் திருத்திக் கொண்டான்; அல்லது திருந்தி விட்டான் என்றால் அவனுடைய குறைகளை நீங்கள் மறுபடியும் கிளராதீர்கள். அவனைக் குத்திப் பேசாதீர் கள். உங்களின் சகோதரர் மனதைக் காயப்படுத்தாதீர்கள்.*

*“இறைநம்பிக்கையாளன் குத்திப் பேசுபவனாகவும், சதா சாபமிடுபவனாகவும் இருக்கமாட்டான்; மானங்கெட்ட செயல்புரிபவனாகவும், (சண்டையில்) தீய வார்த்தைகள் பேசுபவனாகவும் இருக்கமாட்டான்” என இறைத்தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் கூறினார்கள்*

***அறிவித்தவர்: அபூதர்தா(ரலி) நூல்: ஹாகிம்***

*இறைத்தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்*

*இயற்கையாகவும் அருவருப்பாகப் பேசுபவராய் இருக்க வில்லை; செயற்கையாகவும் அருவருப்பாகப் பேசுப வராய் இருக்கவில்லை. மேலும், "நற்குணமுள்ளவரே உங்களில் சிறந்தவர்" என இறைத்தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் கூறினார்கள்.*

***அறிவித்தவர்: அப்துல்லாஹ் இப்னு அம்ர்(ரலி)***
***நூல்: ஸஹீஹ் அல் புகாரீ, ஹதீஸ் எண்: 6035***

## பிறர் குறையை மறைத்திடுங்கள்

*நீங்கள் கண்ணாடிக்கு முன்னால் நின்றால் உங்களின் குறையை அது பிறரிடமிருந்து மறைத்துக் கொள்கிறது. நீங்கள் உங்களின் சகோதரர் குறையை பிறரைவிட்டும் மறைத்துக் கொள்ளுங்கள். உங்களின் குறையை மறுமை யில் இறைவன் மறைத்துக் கொள்வான்.*

*"ஒரு முஸ்லிம் மற்றொரு முஸ்லிமின் சகோதரன் ஆவான். அவனுக்கு அநீதியிழைக்கவும் மாட்டான்; அவனை (பிறரின் அநீதிக்கு ஆளாகும்படி) கைவிட்டு விடவும் மாட்டான். தன் சகோதரனின் தேவையை நிறைவு செய்வதில் ஈடுபட்டிருக்கிறவரின் தேவையை நிறைவு செய்வதில் அல்லாஹ்வும் ஈடுபட்டிருக்கிறான். ஒரு முஸ்லிமின் ஒரு துன்பத்தை நீக்குகிறவரைவிட்டு அல்லாஹ்வும் மறுமை நாளின் துன்பங்களில் ஒரு துன்பத்தை நீக்குகிறான். ஒரு முஸ்லிமின் குறையை மறைக்கிறவரின் குறையினை மறுமை நாளில் அல்லாஹ் வும் மறைக்கிறான்" என இறைத்தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் கூறினார்கள்.*

***அறிவித்தவர்: அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி)***
***நூல்: ஸஹீஹ் அல் புகாரீ, ஹதீஸ் எண்: 2442***

# பெருமையடிக்காதீர்கள்

*உங்களின் குறையைச் சுட்டுகிறபோது கண்ணாடி பெருமையடிப்பதில்லை. அது தன் கடமையைச் செய்து விட்டு கண்ணியமாய் ஒதுங்கிக் கொள்கிறது. நீங்கள் உங்களின் சகோதரருக்குக் கண்ணாடியாய் இருக்கிறீர்கள். கடமையைச் செய்துவிட்டு கண்ணியமாய் ஒதுங்கிக் கொள்ளுங்கள். பெருமை, கர்வம், ஆணவம் முதலிய வற்றை முற்றிலுமாகத் தவிர்த்துக் கொள்ளுங்கள். பெருமை இறைவனுக்கு மட்டுமே உரியது என்பதை மனதில் வையுங்கள்.*

*“உன் முகத்தை மனிதர்களைவிட்டும் (பெருமையாக) திருப்பாதே! பூமியில் பெருமையாகவும் நடக்காதே! கர்வம் கொண்டு ஆணவம் கொள்வோரை ஏக இறைவன் நேசிக்கவே மாட்டான். உன்னுடைய நடையில் நடு நிலையை மேற்கொள்! உன் குரலையும் தாழ்த்திக் கொள்! குரல்களில் வெறுக்கத்தக்கது கழுதையின் குரல்தான்.”*

***திருக்குர்ஆன் 31:18,19***

*...கர்வமுடையோராய், வீண் பெருமை உடையோராய் இருப்பவர்களை ஏக இறைவன் நேசிப்பதே இல்லை.*

***திருக்குர்ஆன் 4:36***

*“தன்னுடைய ஆடையைப் பெருமையுடன் (தரையில்) இழுத்துக் கொண்டு செல்கிறவரை அல்லாஹ் மறுமை யில் ஏறெடுத்தும் பார்க்கமாட்டான்” என இறைத்தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் கூறினார்கள்.*

*“இறைத்தூதர் அவர்களே! நான் கவனமாய் இல்லா விட்டால் என்னுடைய கீழங்கியின் இரண்டு பக்கங்களில் ஒன்று கீழே சரிந்து விழுகிறதே” என அபூ பக்ர்(ரலி) கூறினார்கள்.*

*“நீங்கள் தற்பெருமையுடன் அப்படிச் செய்பவரல்லர்” என இறைத்தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் கூறினார்கள்.*

**அறிவித்தவர்: அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி)**
**நூல்: ஸஹீஹ் அல் புகாரீ, ஹதீஸ் எண்: 5784, 3665.**

*“உண்ணுங்கள்; பருகுங்கள்; உடுத்துங்கள்; தானம் செய்யுங்கள்; வீண்விரயம் செய்யாதீர்கள்; தற்பெருமை கொள்ளாதீர்கள்” என இறைத்தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் கூறினார்கள்.*

*“விரயம் அல்லது தற்பெருமை ஆகிய இரண்டும் உன்னை அண்டாத வரை நீ விரும்பியதை உண்ணலாம்; நீ விரும்பியதை உடுத்தலாம்” என இப்னு அப்பாஸ்(ரலி) கூறினார்.* **நூல்: ஸஹீஹ் அல் புகாரீ**

*“தன்னுடைய ஆடையைத் தற்பெருமையுடன் (தரையில் படும்படி) இழுத்துக்கொண்டு சென்றவனை அல்லாஹ் (மறுமையில்) ஏறெடுத்தும் பார்க்கமாட்டான்” என இறைத்தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் கூறினார்கள்.* **அறிவித்தவர்: இப்னு உமர்(ரலி)**
**நூல்: ஸஹீஹ் அல் புகாரீ, ஹதீஸ் எண்: 5783**

*பெருமைக்காரனுக்கு நரகம்தான் கதி என்பதை அறிந்து கொள்ளுங்கள். பெருமைக்காரனை நரகம் தன்னுள் வைத்துக் கொள்வதை பெருமையாகக் கருதுகிறது.*

*“சுவர்க்கமும் நரகமும் வாக்குவாதம் செய்துகொண்டன.*

*“பெருமை அடிப்பவர்களுக்காகவும் அக்கிரமக்காரர் களுக்காகவும் நான் சொந்தமாய் ஆக்கப்பட்டுள்ளேன்” என நரகம் சொன்னது.*

*“எனக்கு என்ன நேர்ந்ததோ! மக்களில் பலவீனர்களும் அவர்களில் கீழ்நிலையினருமே (அதிகமாக) என்னுள் நுழைகிறார்கள்” என சுவர்க்கம் கூறியது.*

*“நீ என் அருள். உன் மூலமே என் அடியார்களில் நான் நாடிய சிலருக்கு அருள் புரிகிறேன்'' என அல்லாஹ் சுவர்க்கத்திடம் கூறினான்.*

*“நீ வேதனை(க்காகத்) தான். உன் மூலமே என் அடியார் களில் நான் நாடிய சிலருக்கு வேதனை கொடுக்கிறேன்” என அல்லாஹ் நரகத்திடம் கூறினான்.*

*அவ்விரண்டில் ஒவ்வொன்றும் வயிறு நிரம்பத் தரப் படும். ஆனால், நரகமோ இறைவன் தன் காலை அதன் மீது வைக்கும் வரை வயிறு நிரம்பாது. இறைவன் காலை வைக்கும்போது “போதும்! போதும்!” எனக் கூறும். அப் போதுதான் அதற்கு வயிறு நிரம்பும். மேலும், அதில் ஒரு பகுதி மற்றொரு பகுதியுடன் இணைக்கப்படும்.*

*அல்லாஹ் தன் படைப்புகளில் யாருக்கும் அநியாயம் செய்யமாட்டான். ஆனால், வல்லவனும் மாண்புடை யோனுமான அல்லாஹ், சுவர்க்கத்திற்கு என்றே (புதிதாகச்) சிலரைப் படைப்பான்” என இறைத்தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் கூறினார்கள்.*

***நூல்: ஸஹீஹ் அல் புகாரீ, ஹதீஸ் எண்: 4850.***

*பெருமைக்காரர்கள் இந்த உலகத்திலும் இறைவனால் தண்டிக்கப்படலாம். இதற்கு ஓர் முன்னுதாரணமே இருக்கிறது. இறைத்தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் கடுமையான எச்சரிக்கையாய் இதைக் கூறினார்கள்.*

*“ஒரு மனிதன் தன் கீழாடையை தற்பெருமையினால் (தரையில்) இழுத்துக் கொண்டே நடந்தபோது, அவன் (பூமியில்) புதைந்து போகும்படி செய்யப்பட்டான். அவன் மறுமை நாள் வரை பூமிக்குள் அழுந்திச் சென்று கொண்டேயிருப்பான்” என இறைத்தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் கூறினார்கள்.*

***அறிவித்தவர்: அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி)***
***நூல்: ஸஹீஹ் அல் புகாரீ, ஹதீஸ் எண்: 3485***

*பெருமை அணுவளவு ஒருவரின் இதயத்தில் குடி கொண்டாலும் அவருக்கு சுவர்க்கம் கிடைக்காது என்பதை அறிந்து கொள்ளுங்கள்.*

*“தன் இதயத்தில் அணுவளவு பெருமையை வைத்திருப்பவர் சுவர்க்கம் புகமாட்டார்...” என இறைத்தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் கூறினார்கள்.*

***அறிவித்தவர்: இப்னு மஸ்வூத்(ரலி) நூல்: முஸ்லிம் 91***

*பெருமை இறைவனின் ஆடை; அதை அணிந்து கொள்ள நினைக்காதீர்கள். அதை நீங்கள் அணிந்து கொண்டால் இம்மையிலும் மறுமையிலும் அழிந்துபோவீர்கள். இப்லீஸ் இறைவனின் உவப்பைப் பெற்றான். உயர்வடைந்து வானவர்களுடன் இருந்தான். இப்லீஸ் இறைவனை வணங்குவதில் குறை ஏதும் வைத்ததில்லை. ஆனால் அவன் பெருமைக்காரனாய் இருந்தான். அதன் காரணமாய் அவனை நிரந்தர நரகவாசியாய் இறைவன் ஆக்கிவிட்டான்.*

*“நிச்சயமாக களிமண்ணிலிருந்து மனிதனைப் படைக்கப் போகிறேன்” என உம்முடைய இரட்சகன் வானவர்களிடம் கூறியதையும்,*

*“நான் அவரைச் செவ்வைப்படுத்தி, என் ஆவியிலிருந்து அவருக்குள் ஊதியதும் அவருக்குப் பணியுங்கள்” (எனக் கூறியதையும் நினைவு கூரும்).*

*அப்போது வானவர்கள் அனைவரும் கூட்டாகச் சிரம் பணிந்தனர்.*

*இப்லீஸைத் தவிர; அவன் பெருமையடித்து இறைமறுப் பாளர்களில் ஒருவனாய் ஆகிவிட்டான்.*

*“இப்லீஸே! நான் என் இரு கைகளால் படைத்தவருக்குப் பணிவதிலிருந்து உன்னைத் தடுத்தது எது? நீ பெருமை யடிக்கிறாயா? அல்லது நீ உயர்ந்தவர்களில் ஆகி விட்டாயா?” என (இறைவன்) கேட்டான்.*

*“அவரைவிட நானே மேலானவன்; என்னை நீ நெருப் பிலிருந்து படைத்தாய். அவரையோ களி மண்ணி லிருந்து படைத்தாய்” என (இப்லீஸ்) கூறினான்.*

*‘‘இதிலிருந்து நீ வெளியேறு! நிச்சயமாக நீ அருளை விட்டும் ஒதுக்கப்பட்டவன்’’ (என்றும் இறைவன் கூறினான்).*

*“உன் மீது மறுமை நாள் வரை என் சாபம் நிச்சயமாய் இருக்கிறது” (என்றும் இறைவன் கூறினான்).*

*“இரட்சகனே! அவர்கள் (மீண்டும்) எழுப்பப்படும் நாள் வரை எனக்கு நீ அவகாசம் அளிப்பாயாக” என (இப்லீஸ்) கேட்டான்.*

*“நிச்சயமாக நீ அவகாசமளிக்கப்பட்டவர்களில் உள்ளாய்” என (இறைவன்) கூறினான்.*

*“குறிப்பிட்ட காலத்தின் நாள்வரை (உனக்கு அவகாசம் உண்டு” என்றும் இறைவன் கூறினான்).*

*‘‘உன் கண்ணியத்தின் மீது சத்தியமாக! நிச்சயமாய்*

*அவர்கள் அனைவரையும் வழிகெடுப்பேன்” என (இப்லீஸ்) கூறினான்.*

*“அவர்களில் தூய உள்ளங்கொண்ட உன்னுடைய அடியார்களைத் தவிர” (என்றான்).*

*“அது உண்மை; உண்மையையே நானும் சொல்கிறேன்” என இறைவன் கூறினான்.*

*“உன்னைக் கொண்டும், அவர்களில் உன்னைப் பின் பற்றியவர்கள் அனைவரைக் கொண்டும் நரகத்தை நிரப்புவேன்.” (என இறைவன் கூறினான்)*

***திருக்குர்ஆன் 38:71-85***

*வானவர்கள் அளவிற்கு உயர்ந்த இப்லீஸையே பெருமை யடித்த ஒரே காரணத்திற்காக இறைவன் தூக்கி எறிந்து விட்டான் என்றால் நீங்கள் பெருமையடித்தால் உங்களின் நிலை என்ன ஆகும் என்பதை சற்று எண்ணிப்பாருங்கள்.*

## பிதற்றல் வேண்டாம்

*கடமையைச் செய்த கண்ணாடி, “நானே இன்னாரைத் திருத்தினேன். நான் இல்லை என்றால் அவரின் கதி என்ன ஆயிருக்கும் தெரியுமா” என பிதற்றுவதில்லை. நீங்கள் உங்களின் சகோதருக்குக் கண்ணாடி; உங்களின் சகோதரனுக்காக நீங்கள் செய்யவேண்டிய கடமையைச் செய்யுங்கள். நான்தான் காரணம் என பிதற்றாதீர்கள். இறைவன் நாடாமல் எதுவும் நடப்பதில்லை என்பதை முழுமையாக நம்புங்கள். ஒருவர் திருந்துவதற்கு நீங்கள் காரணமாய் இருந்தால் அதற்கான கூலியை இறைவன் உங்களுக்கு உறுதியாய் அளிக்கத்தான் போகிறான். பிதற்றித் திரிவதால் இறைவன் அளிக்கும் கூலியை நீங்கள் இழந்துவிடக் கூடாது. நீங்கள் செய்த எதையுமே சொல்லிக்காட்டாதீர்கள். இதனால் பிறருக்கு மன*

*வேதனை ஏற்படும். உங்கள் மீது அவர் வைத்துள்ள மரியாதையும் அன்பும் குறைந்துவிடும்.*

*இறைவழியில் தங்களின் செல்வத்தைச் செலவிட்ட பின்னர், அதைச் சொல்லிக் காண்பிக்காமலும், (எவ்வகையிலும்) நோவினைச் செய்யாமலும் இருப்போருக்குரிய நற்கூலி அவர்களின் இரட்சகனிடம் இருக்கிறது. அவர்களுக்கு எத்தகைய அச்சமுமில்லை; துக்கப்படவும் மாட்டார்கள்.* ***திருக்குர்ஆன் 2:262***

## கண்ணியம் காத்துக் கொள்ளுங்கள்

*கண்ணாடி உங்களின் கண்ணியத்தைக் குறைப்பதில்லை. உங்களைச் சீரமைத்து கண்ணியத்தை மென்மேலும் அதிகப்படுத்துகிறது. நீங்கள் உங்கள் சகோதரரின் கண்ணியத்தை காயப்படுத்தாதீர்கள். கண்ணியத்திற்கு இழுக்கு ஏற்படுத்துவது இறைநம்பிக்கையாளனின் பண்பன்று. உங்களின் மூலம் உங்கள் சகோதரரின் கண்ணியம் மென்மேலும் அதிகரிக்க வேண்டும்.*

*'துல்ஹஜ்' மாதம் பத்தாம் நாள் இறைத்தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் உரை நிகழ்த்தினார்கள். அப்போது,*

*"மக்களே! இது எந்நாள்?" எனக் கேட்டார்கள்.*

*"புனிதமிக்க தினம்" என மக்கள் கூறினார்கள்.*

*பிறகு, "இது எந்நகரம்?" என இறைத்தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் கேட்டார்கள்.*

*"புனிதமிக்க நகரம்" என மக்கள் கூறினர்.*

*பிறகு, "இது எம்மாதம்?" எனக் கேட்டார்கள்.*

*"புனிதமிக்க மாதம்!" என மக்கள் கூறினர்.*

*பிறகு, "நிச்சயமாய் இம்மாதத்தின் இந்நாள் எவ்வாறு உங்களுக்குப் புனிதம் பெற்றுள்ளதோ அவ்வாறே உங்கள் ஒவ்வொருவரின் உயிர்களும் உடைமைகளும் கண்ணியமும் உங்களுக்குப் புனிதமானவை!" என இறைத்தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் பல முறை கூறினார்கள்.*

*பிறகு தலையை உயர்த்தி, "இறைவா! நான் (உன் மார்க்கத்தை மக்களிடம்) சேர்த்துவிட்டேனா? இறைவா! நான் (உன் மார்க்கத்தை மக்களிடம்) சேர்த்து விட்டேனா?" என்றும் கூறினார்கள்.*

*"என் உயிரைத் தன் கையில் கொண்டிருப்பவன் மீது ஆணையாக! இது அவர்கள் தங்களின் சமுதாயத்திற்கு வழங்கிய இறுதி உபதேசமாகும்" இவ்வாறு அறிவிப்பாளர் குறிப்பிடுகிறார்.*

*பிறகு "இங்கு வந்தவர்கள் வராதவர்களுக்கு அறிவித்து விடுங்கள்! என் மரணத்திற்குப் பின் நீங்கள் ஒருவரோடு ஒருவர் சண்டையிட்டு இறைமறுப்பாளர்களாய் ஆகி விட வேண்டாம்!" என்றும் இறைத்தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் எச்சரித்தார்கள்.*

***அறிவித்தவர்: இப்னு அப்பாஸ்(ரலி)***
***நூல்: ஸஹீஹ் அல் புகாரீ, ஹதீஸ் எண்: 1739, 1740***

## புறத்தைப் புறந்தள்ளுங்கள்

*உங்களின் குறைகளை கண்ணாடி உங்களிடம் மட்டுமே சொல்கிறது. நேரடியாகவும், தன்மையாகவும், மென்மையாகவும், தயக்கமின்றியும், நன்மையை நாடியதாகவும் உண்மையைச் சொல்கிறது. உங்களிடம் காணப்படும் குறையைப் பிறரிடம் சொல்லும் பழக்கம் கண்ணாடிக்கு*

இல்லை. நீங்கள் ஓர் இறைநம்பிக்கையாளர்; உங்களின் சகோதரருக்கு நீங்கள் கண்ணாடி. இதை எந்தச் சூழலிலும் மறந்துவிடாதீர்கள். உங்களின் சகோதரரிடம் காணப்படும் குறைகளை அவரிடம் நேரடியாகவும், தயக்கமின்றியும் சொல்லுங்கள். உண்மையைச் சொல் லுங்கள். நல்ல நோக்கத்துடன் சொல்லுங்கள்.

உங்களின் சகோதரர் குறித்த நல்ல விஷயங்களை நீங்கள் விரும்பினால் பிறரிடம் சொல்லுங்கள். அவரிடம் காணப்படும் குறையை பிறரிடம் சொல்லாதீர்கள். குறைசொல்லி புறம்பேசும் நபராய் ஒருபோதும் இருக் காதீர்கள். பிறரின் அன்பைப் பெறக்கூடியவராய் இருங்கள். வெறுப்புக்கு ஆளாகாதீர்கள். தனி நபர் விமர்சனத்தைத் தவிருங்கள்.

பிறர் புறம்பேசுவதைச் செவியுறாதீர்கள். புறம்பேசு வோரைக் கண்டால் கண்டியுங்கள். அது நல்ல பண்பல்ல என அறிவுறுத்துங்கள். புறம்பேசுவதை நீங்கள் ஆர்வ மாகச் செவியுறுவதால் புறம்பேசுவோருக்கு நீங்கள் துணைநிற்கிறீர்கள். தீமையில் உங்கள் ஆதரவைப் பெறு பவர் திருந்துவதற்கான வாய்ப்பை இழந்துவிடுகிறார்.

பிறர் குறித்த தவறான செய்திகளை நீங்கள் பரப்பு வதாலோ பிறர் பரப்புவதை ஆதரிப்பதாலோ உங்களுக்கு என்ன பலன் என்பதை ஒரு நிமிடம் சிந்தியுங்கள். உண்மையில் இதனால் உங்களின் நேரம் வீணாகும். உங்களுக்கு மன அழுத்தம்தான் ஏற்படும். இதனால் உங்களுக்கு உலகத்தில் சில அற்பமான ஆதாயங்கள் கிடைக்கலாம். காலப்போக்கில் உங்களின் சாயம் வெளுத்துவிடும். பிறர் உங்களின் மீது வைத்துள்ள நம்பகத் தன்மை தகர்ந்துவிடும். உங்களின் கண்ணியம்

காற்றில் கரைந்த சாம்பலாகிவிடும். நீங்கள் இறை நம்பிக்கையாளர்; உங்களுக்கு மறுமை வாழ்க்கையில் நம்பிக்கை இருக்கிறது. அன்று உங்களின் ஒவ்வோர் அசைவுக்கும் இறைவனிடம் பதில் சொல்லியாக வேண்டும் என்பதை மறந்துவிடாதீர்கள். இழிவைத் தொட்டு அழைக்காதீர்கள்.

கண்ணாடியின் நோக்கம் சீரமைப்பதாகவே இருக்க வேண்டும்; சீர்கெடுப்பதாய் இருக்கக்கூடாது. உங்களின் சகோதரரைச் சீரமைப்பதையே குறிக்கோளாகக் கொள்ளுங்கள். ஒருவரிடம் இருப்பதைத்தானே சொல் கிறோம்; இல்லாததையா சொல்லிவிட்டோம் என எண்ணாதீர்கள்.

"புறம் பேசுதல் என்றால் என்ன வென்று அறிவீர்களா?" என இறைத்தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் கேட்டார்கள்.

"அல்லாஹ்வும் அவனுடைய தூதருமே அறிவர்" என நபித்தோழர்கள் பதிலளித்தார்கள்.

"உன் சகோதரன் குறித்து அவன் பிறரிடம் சொல்ல விரும்பாத ஒன்றை நீ பிறரிடம் சொல்வது" என இறைத்தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் கூறினார்கள்.

"நான் கூறுகிற குறை என் சகோதரனிடம் உண்மை யிலேயே காணப்பட்டாலுமா?" என ஒருவர் கேட்டார்.

"நீ அவனிடம் காணும் குறையைச் சொன்னால், புறங்கூறி யவனாவாய். அவனிடம் காணப்படாததைச் சொன்னால் அவன் மீது அவதூறு கற்பித்தவனாவாய்" என இறைத் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் பதிலளித் தார்கள். **அறிவித்தவர்: அபூஹுரைரா(ரலி) நூல்: முஸ்லிம்**

*புறம்பேசுவதால் இம்மையின் இழிவைப் பாருங்கள்.*

*...உங்களில் சிலர் சிலர் குறித்து புறம் பேசாதீர்கள். உங்களில் யாரேனும் இறந்த தம் சகோதரனின் மாமிசத்தைப் புசிக்க விரும்புவாரா? (இல்லை!) அதனை வெறுப்பீர்கள்! இன்னும், ஏக இறைவனை அஞ்சுங்கள்! நிச்சயமாக பாவத்திலிருந்து மீள்வதை ஏக இறைவன் ஏற்பவன்; நிகரற்ற அன்பாளன்.* ***திருக்குர்ஆன் 49:12***

*புறம்பேசும் பழக்கம் உங்களை மிகவும் கோரப்படுத்தியுள்ளது. புறம் பேசுதல் இறந்த சகோதரரின் மாமிசத்தைப் புசிப்பதற்குச் சமம் என இறைவன் எச்சரித்துள்ளான். நீங்களோ ஒருபடி மேலே சென்று இறந்து பல ஆண்டுகள் ஆன சகோதரர்களைக் கூட புறம்பேசி, ஏசி, அவதூறு கூறுகிறீர்கள். இறந்துபோன இஸ்லாமிய அறிஞர்களைக்கூட ஏளனம் செய்கிறீர்கள்.*

*“இறந்தோரை ஏசாதீர்கள்! ஏனெனில் அவர்கள் தாம் முற்படுத்தியவற்றின்பால் சென்றுவிட்டார்கள்” என இறைத்தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் கூறினார்கள்.* ***அறிவித்தவர்: ஆயிஷா(ரலி)***

***நூல்: ஸஹீஹ் அல் புகாரீ ஹதீஸ் எண்: 1393***

*புறம்பேசுவதால் மறுமையில் எற்படும் இழிநிலை குறித்து இறைவன் கடுமையாய் எச்சரிக்கிறான்.*

*குறைகூறிப் புறம்பேசித் திரியும் ஒவ்வொருவருக்கும் ‘வய்ல்’ என்னும் (கேடுகெட்ட) நரகம்தான்.*
*அவன், பொருளைச் சேகரித்து எண்ணிக் கொண்டும் இருக்கிறான்.*

*நிச்சயமாக தன் பொருள் தன்னை நிலைத்திருக்கச் செய்யும் என அவன் எண்ணுகிறான்.*

*அவ்வாறல்ல; நிச்சயமாக அவன் ‘ஹுதமாவில்’ எறியப்படுவான்.*
*ஹுதமா என்னவென்பதை உமக்கு அறிவித்தது எது?*
*அது, ஏக இறைவனின் எரிக்கப்பட்டுக் கொண்டிருக்கும் நெருப்பாகும்.*
*அது இதயங்களில் பாயும்.*
*அது அவர்களைச் சூழ்ந்தே மூட்டப்படும்.*
*நீண்ட கம்பங்களில் (கட்டப்பட்டு) இருப்பார்கள்.*

***திருக்குர்ஆன் 104:1-9***

*புறம்பேசுபவர்கள் மண்ணறையிலேயே தண்டிக்கப் படுவார்கள் என்பதையும் இறைத்தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் எச்சரித்தார்கள்.*

*இறைத்தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம், இரண்டு மண்ணறைகளைக் கடந்து சென்றபோது, “(மண்ணறைகளிலுள்ள) இவ்விருவரும் வேதனை செய் யப்படுகிறார்கள். ஆனால் மிகப்பெரும் செயலுக்காக இருவரும் வேதனை செய்யப்படவில்லை. இதோ! இவர் (தம் வாழ்நாளில்) சிறுநீர் கழிக்கும்போது (தம் உடலை) மறைக்கமாட்டார். இதோ! இவர் புறம்பேசித் திரிந்தார்” என கூறினார்கள்...* ***அறிவித்தவர்: இப்னு அப்பாஸ்(ரலி)***

***நூல்: ஸஹீஹ் அல் புகாரீ, ஹதீஸ் எண்: 6052***

## அவதூறு வேண்டாம்

*உங்களிடம் இல்லாத ஒன்றை இருப்பதாக கண்ணாடி உங்களிடம் காண்பிக்குமா? உள்ளதை உள்ளபடியே தான் கண்ணாடி சொல்கிறது. உங்களின் சகோதரனிடம் இல்லாத ஒன்றை இருப்பதாக ஒருபோதும் கூறாதீர்கள். அது பெரும் அவதூறாகும். அவதூறு மிக மோசமான தீய விளைவுகளை ஏற்படுத்திவிடும். பிறரிடம் இல்லாத*

*ஒன்றை இருப்பதாகக் கூறும் துணிச்சல் ஓர் இறை நம்பிக்கையாளனுக்கு ஒருபோதும் வராது. அவதூறு குறித்து இறைவனின் எச்சரிக்கையைப் பாருங்கள்.*

*...இறைவன் மீது ஆணையாக நீங்கள் இட்டுக்கட்டியது குறித்து விசாரிக்கப்படுவீர்கள்.* **திருக்குர்ஆன் 16:56**

*...அவர்களின் இரட்சகனிடமிருந்து கோபமும், இவ்வுலக வாழ்க்கையில் இழிவும் விரைவில் வந்து சேரும். இட்டுக்கட்டுவோருக்கு இவ்வாறே கூலி கொடுப்போம்.*
**திருக்குர்ஆன் 7:152**

*கடுமையான இந்த எச்சரிக்கையை இறைவன் விடுத்தப் பின்னரும் நீங்கள் பிறர் குறித்து இல்லாத ஒன்றை இருப் பதாகக் கூறித்தான் ஆகவேண்டுமா? அப்படிக் கூறினால் நீங்கள் நரக நெருப்பை அஞ்சிக் கொள்ளுங்கள்.*

## சந்தேகம் ஏன் ?

*நீங்கள் கண்ணாடிக்கு முன்னால் நிற்கிறீர்கள். அது உங்களை சந்தேகக் கண்ணோட்டத்தில் பார்ப்பதில்லை. சந்தேகம் என்பது ஒரு வகையான மனநோய். பிறருக்குக் கண்ணாடியாய் இருக்கவேண்டிய உங்களிடம் ஏன் இந்த மனநோய் இருக்கிறது. உறுதியாகத் தெரியாத விஷயத்தை நீங்கள் இப்படியும் இருக்குமோ என ஏன் சந்தேகிக்கிறீர்கள்?*

*சந்தேகம் மனக்குழப்பத்தை அதிகரிக்கிறது. பாவம் செய்யத் தூண்டுகிறது. உங்களின் சந்தேகத்தை நியாயப் படுத்துவதற்காக பொய்யுரைக்கத் தூண்டுகிறது. உங்கள் நிம்மதியை அழித்துவிடுகிறது. நிலையற்ற தன்மையை உங்களுக்குள் உருவாக்குகிறது. மனிதர்களை வெறுக்கும் பண்பை அதிகரிக்கிறது. யாரையும் நம்பமுடியாமல்*

*எல்லாச் சுமைகளையும் நீங்களே சுமக்கும் அவலமும் உண்டாகிறது.*

*யார் என்ன செய்தாலும் இறைவன் நாடாமல் உங்களுக்கு எவ்விதத் தீங்கையும் ஏற்படுத்த முடியாது. இறைவன் உங்களை அழிக்க நாடிவிட்டால் உங்களை யாராலும் காப்பாற்றவே முடியாது என்பதை உறுதியாக நம்புங்கள். இந்த நம்பிக்கை உங்களிடம் உறுதியாய் இருந்தால் உங்களுக்கு ஒருபோதும் சந்தேகம் ஏற்படாது.*

*இறைநம்பிக்கையாளர்களே! அதிகமான சந்தேகங்களி லிருந்து விலகிக்கொள்ளுங்கள்! ஏனெனில், நிச்சயமாக சந்தேகங்களில் சில பாவங்களாய் அமைகின்றன...*

***திருக்குர்ஆன் 49:12***

*...சந்தேகம் கொள்பவர்களில் நீரும் ஆகிவிடாதீர்!*

***திருக்குர்ஆன் 10:94***

*(போரில் பங்கேற்காதிருக்க) உம்மிடம் அனுமதி கேட்ப வர்கள் அனைவரும் ஏக இறைவனையும், இறுதி நாளை யும் நம்பாதவர்களே! தங்களின் சந்தேகத்திலேயே அவர்களின் இதயங்கள் இருக்கின்றன. எனவே அவர்கள், தங்களின் சந்தேகங்களிலேயே தடுமாறுகிறார்கள்.*

***திருக்குர்ஆன் 9:45***

*சந்தேகத்திற்கு வழிவகுக்கும் அனைத்து வாசல்களையும் அடைத்துவிடுங்கள். சந்தேகத்திற்கு இடமளிக்கும் செயல்களைத் தவிர்த்துக் கொள்ளுங்கள்.*

*...கொடுக்கல் வாங்கல் சிறியதோ, பெரியதோ அதை, அதன் காலவரையறையுடன் எழுதுவதில் அலட்சியம் காட்டாதீர்கள். ஏக இறைவனின் முன்னிலையில் மிகவும் நீதமானதாகவும், சாட்சியத்தில் உறுதியை ஏற்படுத்து*

*வதற்காகவும் உங்களுக்கு சந்தேகங்கள் ஏற்படாமல் இருக்கவும் இதுவே சிறந்தது.* ***திருக்குர்ஆன் 2:282***

*மேற்கண்ட வசனத்தில் கடன் கொடுக்கல் வாங்கலை எழுதிவைக்கச் சொல்வதற்கு பிற்காலத்தில் சந்தேகம் வரக்கூடாது என்பதும் ஒரு காரணம் என இறைவன் விளக்கியுள்ளான்.*

*சந்தேகத்திற்கு வழிவகுக்கும் வாசல்களை இறைத்தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அடைத்தார்கள். நீங்களும் உங்கள் மீது சந்தேகம் வராமல் இருக்கக் கற்றுக் கொள்ளுங்கள்.*

*இறைத்தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் பள்ளிவாசலில் (இஃதிகாஃப்) இருந்தார்கள். அவர் களுடன் அவர்களின் மனைவியரும் இருந்து விட்டுத் திரும்பினார்கள். அப்போது,*

*'அவசரப்படாதே!" நானும் உன்னோடு வருகிறேன்" என இறைத்தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் என்னிடம் கூறினார்கள்.*

*என் அறை உஸாமாவின் வீட்டிற்குள் இருந்தது. இறைத் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் என்னுடன் வெளியே வந்தபோது, அன்ஸாரிகளைச் சேர்ந்த இருவர் இறைத்தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களைச் சந்தித்து, அவர்களைக் கூர்ந்து பார்த்து விட்டுக் கடந்து சென்றனர்.*

*''நீங்கள் இருவரும் இங்கே வாருங்கள்'' என இறைத் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அழைத்து, "இவர் (என் மனைவி) ஸஃபிய்யாதான்!" என்றார்கள்.*

*''ஸுப்ஹானல்லாஹ் - இறைவன் மிகத்தூயவன்;*

*(வியப்புடன்) இறைத்தூதர் அவர்களே!" என அவ்விரு வரும் கூறினார்கள்.*

*"(அவ்வாறல்ல) நிச்சயமாக ஷைத்தான் மனிதனின் ரத்த நாளங்களில் ஓடுகிறான்; உங்கள் உள்ளங்களில் அவன் தவறான எண்ணங்களைப் போட்டுவிடுவான் என நான் அஞ்சினேன்" என இறைத்தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் தெளிவுபடுத்தினார்கள்.*

***அறிவித்தவர்: ஸஃபிய்யா(ரலி)***

***நூல்: ஸஹீஹ் அல் புகாரீ, ஹதீஸ் எண்: 2038***

*(ஆதாரமில்லாமல் பிறரை) சந்தேகிப்பது குறித்து உங்களை எச்சரிக்கிறேன். ஏனெனில், சந்தேகம் கொள் வது பெரும் பொய்யாகும். (பிறரின் குறையைத்) துருவித் துருவி ஆராயாதீர்கள். (பிறரை அதிக விலை கொடுத்து வாங்கவைப்பதற்காக விற்பனைப் பொருளின்) விலையை ஏற்றிக் கேட்காதீர்கள். ஒருவருக்கொருவர் பொறாமை கொள்ளாதீர்கள். கோபம் கொள்ளாதீர்கள். பிணங்கிக் கொள்ளாதீர்கள். (மாறாக,) அல்லாஹ்வின் அடியார் களே! (அன்பு காட்டுவதில்) சகோதரர்களாய் இருங்கள்" என இறைத்தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் கூறினார்கள்.* ***அறிவித்தவர்: அபூ ஹுரைரா(ரலி)***

***நூல்: ஸஹீஹ் அல் புகாரீ, ஹதீஸ் எண்: 6064, 6066***

*மார்க்கத்தில் தெளிவு இல்லாதவர்கள் குறித்து பேசுவது சந்தேகம் ஆகாது. அதுவும் நல்ல நோக்கத்தில்தான் பேசவேண்டும். நீங்கள் என்ன நோக்கத்தில் எதைப் பேசுகிறீர்கள் என்பதை இறைவன் அறிகிறான் என்பதை ஒருபோதும் மறந்துவிடாதீர்கள்.*

*"இன்னாரும் இன்னாரும் நம்முடைய மார்க்கத்தில் எதையும் அறிந்ததாக நான் கருதவில்லை" என (இரண்டு*

*நபர்கள் குறித்து) இறைத்தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் கூறினார்கள்.* ***அறிவித்தவர்: ஆயிஷா(ரலி)***
***நூல்: ஸஹீஹ் அல் புகாரீ, ஹதீஸ் எண்: 6067, 6068.***

*சந்தேகத்தைத் தவிருங்கள். சந்தோஷமாக வாழுங்கள். மறுமை வெற்றியை இலட்சியமாகக் கொள்ளுங்கள்.*

## ஒற்றனாய் இருக்காதீர்கள்

*பிறர் குறித்த விஷயங்களைத் துருவித்துருவி ஆராயாதீர்கள்! பிறரின் குற்றங்களைத் தேடி அலையாதீர்கள்! குற்றத்தைப் பொறுத்தவரையில் அது தானாக வெளிப்படும்போது அதற்கான பரிகாரத்தைத் தேடுங்கள். வெளிப்படும் குற்றத்திற்கு தண்டனைகள் விதிக்கப்படும்; பரிகாரங்கள் காணப்படும். மறைவான குற்றத்தை இறைவனைத் தவிர்த்து யார் அறிவார் என்பதை மனதில்வையுங்கள். ஒற்றர் வேலை பார்ப்பதை இறைவன் தடுக்கிறான்.*

*...(பிறர் குறையைத்) துருவித் துருவி ஆராயாதீர்கள்!...*
***திருக்குர்ஆன் 49:12***

*பிறரைக் குற்றம் பிடிக்க காத்திருக்காதீர்கள்! உங்களின் குற்றம் என்ன என்பதை ஆராயுங்கள். அதை விட்டும் விலகுங்கள். இறைவன் மறுமையில் பிறரின் மறைவான குற்றம் குறித்து உங்களிடம் விசாரிக்க மாட்டான். உங்களின் குற்றம் குறித்துத்தான் விசாரிப்பான்.*

*“மக்களின் குறைகளை விட்டுவிட்டுத் தம் குறைகளைக் காண்பவருக்கு ‘தூபா’ எனும் நிழல் தரும் மரம் (சுவர்க்கத்தில்) உண்டு” என இறைத்தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் கூறினார்கள்.*

***அறிவித்தவர்: அனஸ்(ரலி) நூல்: பஸ்ஸார்***

*பிறர் குறைகளைத் துருவித்துருவி ஆராயக் கூடாது என்ற விஷயம் குறித்து ஸஹீஹ் அல் புகாரீயின் ஹதீஸ் எண் 6064 மற்றும் 6066 இரண்டையும் இதற்கு முந்தைய பகுதியில் காணலாம்.*

## கேலி செய்யாதீர்கள்

*தனக்கு முன் நிற்பவரை கண்ணாடி கேலி செய்கிறதா? இல்லையே. நன்நோக்கில்தான் உங்களின் குறைகளைச் சுட்டிக்காட்டுகிறது. பிறரிடம் காணப்படும் குறைகளுக் காக அவரைக் கேலிசெய்யாதீர்கள். கேலிசெய்தல் இறைநம்பிக்கையாளர்களின் பண்பன்று. கேலிசெய்தலை இறைவன் அக்கிரமம் எனக் குறிப்பிடுகிறான்.*

*தனக்கு முன்பு நிற்பவரை கண்ணாடி பழிப்பதில்லை. உங்களின் சகோதரைப் பழிக்காதீர்கள். பழிப்பதும் பாவமாகும். இதுவும் அக்கிரம் என இறைவன் கூறுகிறான்.*

*இழிவான பெயர்களால் கண்ணாடி யாரையும் அழைப்பதில்லை. நீங்கள் உங்களின் சகோதரரை இழிவான பெயர்களால் அழைக்காதீர்கள். இதுவும் அக்கிரமம் என்றுதான் இறைவன் குறிப்பிட்டுள்ளான். திருக்குர்ஆனின் வசனத்தைப் பாருங்கள்.*

*இறைநம்பிக்கையாளர்களே! ஒரு சமூகத்தார் மற்றொரு சமூகத்தாரைப் பரிகாசம் செய்ய வேண்டாம். அவர்கள் இவர்களை விடச் சிறந்தவர்களாய் இருக்கலாம். பெண் கள் மற்றப்பெண்களையும் (பரிகாசம் செய்யாதீர்கள்). இவர்கள் அவர்களைவிடச் சிறந்தவர்களாய் இருக்கலாம். இன்னும், உங்களில் ஒருவருக்கொருவர் பழித்துக் கொள்ளாதீர்கள்! இன்னும், (உங்களில்) ஒருவரை யொருவர் (தீய) பட்டப் பெயர்களால் அழைக்காதீர்கள்!*

*நம்பிக்கை கொண்ட பின்னர் பட்டப்பெயர் சூட்டுவது மிகக்கெட்டதாகும். இவற்றிலிருந்து மீளாதவர்கள் அக்கிரமக்காரர்கள்.* **திருக்குர்ஆன் 49:11**

*இஸ்லாமின் எதிரிகளே இறைநம்பிக்கையாளர்களைப் பழிப்பார்கள். பழிப்பவர்கள் பாவிகள் என்பதைப் புரிந்து கொள்ளுங்கள்.*

*“வேதக்காரர்களே! ‘ஏக இறைவனையும், எங்களுக்கு இறக்கப்பட்டதையும், எங்களுக்கு முன்னர் இறக்கப்பட்ட வற்றையும் நம்பினோம்’ என்பதைத் தவிர, வேறு எதற்காக எங்களைப் பழிக்கிறீர்கள்? உங்களில் பெரும்பாலோர் பாவிகளே” என (தூதரே) கூறும்!* **திருக்குர்ஆன் 5:59**

*இறைநம்பிக்கையாளர்கள் எப்போதும் பழிக்கப்பட மாட்டார்கள் என இறைவன் கூறியிருக்க அவர்களைப் பழிப்பதற்கு உங்களுக்குத் தைரியம் எங்கிருந்து வருகிறது?*

*...அவர்கள் (இறைநம்பிக்கையாளர்கள்) பழிக்கப்படவும் மாட்டார்கள்.* **திருக்குர்ஆன் 23:7**

*அருவருப்பான வார்த்தைகளைப் பயன்படுத்தாதீர்கள். பேச்சில் நடிப்பை ஏற்படுத்தாதீர்கள். செயற்கையாகப் பேசும் பேச்சுக்கள் விரைவில் உண்மை நிலையை வெளிப் படுத்தி உங்களின் கண்ணியத்தைக் குறைத்துவிடும். யதார்த்தமாகப் பேசுங்கள். நல்ல வார்த்தைகளைப் பயன்படுத்துங்கள்.*

*இறைத்தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களை அப்துல்லாஹ் இப்னு அம்ர்(ரலி) நினைவு கூர்ந்து, “செயற்கையாகவும் அருவருப்பாகப் பேசுபவராக வும் இருக்கவில்லை” எனக் கூறிவிட்டு, “நற்குணமுள்ளவரே உங்களில் மிகச் சிறந்தவர்” என இறைத்தூதர் ஸல்லல்லாஹு*

*அலைஹி வஸல்லம் கூறினார்கள்" என்றும் கூறினார்கள்.*

***நூல்: ஸஹீஹ் அல் புகாரீ, ஹதீஸ் எண்: 6029***

*உங்களின் சகோதரருக்கு காற்றுப் பிரிந்தால் அதற்காகச் சிரிக்காதீர்கள். கேலிசெய்யாதீர்கள். இது வெறுக்கத் தக்க செயல்; வெட்கமின்மையின் வெளிப்பாடு.*

*உடலில் இருந்து வெளியேறும் ஒன்றைக் கேட்டு ஒருவர் சிரிப்பதை இறைத்தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் தடை செய்தார்கள்...*

***நூல்: ஸஹீஹ் அல் புகாரீ, ஹதீஸ் எண்: 6042***

***அறிவித்தவர்: அப்துல்லாஹ் இப்னு ஸம்ஆ(ரலி)***

## பொறாமை வேண்டாம்

*கண்ணாடியை நீங்கள் பார்க்கும்போது உங்களைப் பார்த்து அது பொறாமை கொள்கிறதா? அல்லது கண்ணாடியைப் பார்க்கும் நீங்கள்தான் அதன்மீது பொறாமை கொள்கிறீர்களா? நீங்கள் உங்களின் சகோதரரைப் பார்த்து ஏன் பொறாமை கொள்கிறீர்கள்? ஒருபோதும் யாரின்மீதும் பொறாமை கொள்ளாதீர் கள். பொறாமை கொடியது. அது உங்களையே அழித்து விடும்; உங்களின் நற்செயல்களை நாசமாக்கிவிடும்; உங்களின் இறைநம்பிக்கையை கரித்துவிடும்.*

*"பொறாமை கொள்ளாதிருக்கும்படி உங்களை எச்சரிக் கிறேன். ஏனெனில், நெருப்பு விறகைத் தின்று விடுவதைப் போல பொறாமை நற்செயல்களைத் தின்று விடும்" என இறைத்தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் கூறினார்கள்*

***அறிவித்தவர்: அபூ ஹுரைரா(ரலி) நூல்: அபூ தாவூத்***

*நீங்கள் பொறாமைக்காரர் என்றால் உங்களின் சாட்சியம்*

ஏற்றுக் கொள்ளப்படாது. சமூகத்தில் உங்களின் அந்தஸ்த்தை பொறாமை அழித்துவிடுகிறது.

“மோசக்காரன், மோசக்காரியின் சாட்சியம் செல்லாது. பொறாமைக்காரன் தன் சகோதரனுக்கு எதிராகச் சொல்லும் சாட்சியமும் செல்லாது. ஒரு வீட்டாருக்கு ஆதரவாக அவர்களின் பணியாள் (அல்லது ஊழியர்) சொல்லும் சாட்சியமும் செல்லாது” என இறைத்தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் கூறினார்கள்.

**அறிவித்தவர்: அப்துல்லாஹ் இப்னு உமர்(ரலி)**
**நூல்கள்: அஹ்மத், அபூதாவூத்**

முஹம்மத் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களை இறைவன் தன் தூதராகத் தேர்ந்தெடுத்ததை இஸ்ரவேலர்களால் தாங்கிக் கொள்ளமுடியவில்லை. அவர்கள் பொறாமை கொண்டு இறைத்தூதரை ஏற்றுக் கொள்ள மறுத்தார்கள். இதனால் இறைமார்க்கம் அவர்களுக்குக் கிடைக்காமல் போனது. இறைவனின் சத்திய வாக்கைக்கூட பொறாமைக்காரன் ஏற்றுக் கொள்ளமாட்டான் என்பதற்கு இது ஒரு முன்னுதாரணம்.

தங்களிடம் ஞானம் வந்த பின்னர், தங்களுக்கிடையே உள்ள பொறாமையின் காரணமாகவே தவிர அவர்கள் பிரிந்திடவில்லை. குறிப்பிட்ட ஒரு தவணையில் உம் இரட்சகனின் வாக்கு முந்தியிருக்காவிட்டால், அவர்களிடையே (இதில்) தீர்ப்பு அளிக்கப்பட்டே இருக்கும். இன்னும், அவர்களுக்குப் பின்னர் வேதத்திற்கு வாரிசாக்கப்பட்டவர்கள் இதில் பெரும் சந்தேகத்திலேயே இருக்கிறார்கள். **திருக்குர்ஆன் 42:14**

இஸ்லாம் மட்டுமே ஏக இறைவனிடம் (ஏற்றுக்கொள்ளப்பட்ட) மார்க்கமாகும். வேதம் வழங்கப்பட்டவர்களுக்கு

*(இதன்) அறிவு கிடைத்த பின்னரும் தங்களின் பொறாமை யால் அன்றி மாறுபடவில்லை.*

*தன்னுடைய வசனங்களை மறுப்போரின் கணக்கை ஏக இறைவன் விரைந்து முடிப்பவன்.* ***திருக்குர்ஆன் 3:19***

*...வேதம் கொடுக்கப் பெற்றவர்கள் தெளிவான ஆதாரங் கள் வந்த பின்னரும் தங்களுக்கு இடையே உண்டான பொறாமையால் மாறுபட்டார்கள். எனினும், அவர்கள் மாறுபட்ட உண்மையின்பால் நம்பிக்கையாளருக்குத் தன் அருளால் ஏக இறைவன் நேர்வழிகாட்டினான். இவ்வாறே, ஏக இறைவன், தான் நாடியோரை நேர்வழி யில் நடத்துகிறான்.* ***திருக்குர்ஆன் 2:213***

*சத்தியம் தெளிவான பின்னரும் வேதக்காரர்களில் பலர் தங்களின் மனதில் உள்ள பொறாமையால், நீங்கள் உங்களின் நம்பிக்கைக்குப் பின்னரும் மறுப்பாளர்களாக நீங்கள் மாறவேண்டும் என விரும்புகிறார்கள். ஏக இறைவனின் கட்டளை வரும்வரை அவர்களை மன்னித்து, பொறுத்து விட்டுவிடுங்கள்! நிச்சயமாக ஏக இறைவன் ஒவ்வொரு பொருளின் மீதும் பேராற்றல் மிக்கவன்.* ***திருக்குர்ஆன் 2:109***

*தன் அடியார்களில் தான் நாடியோருக்கு ஏக இறைவன் தன் கொடையை (வேதத்தை) அருளியதற்காக பொறாமை கொண்டு, ஏக இறைவன் அருளியதை மறுக்கிறார்கள். அதற்குப் பதிலாக அவர்கள் தங்களையே விற்றுப் பெற்றது மிகவும் கெட்டதாகும். இதனால், அவர்கள் கோபத்திற்கு மேல் கோபத்திற்கு உள்ளாயினர். மறுப்பாளர்களுக்கு இழிவான வேதனையும் உண்டு.* ***திருக்குர்ஆன் 2:90***

*பொறாமை பகைமைக்கு வழிவகுக்கும்; பகைமை தீய*

*வார்த்தைகள் பேச்செய்யும்; வஞ்சகத் தன்மையை வளர்க்கும்; தீமைகளைச் செய்யத் தூண்டும்; வஞ்சகம் சகோதரத் தன்மையை அழித்துவிடும்.*

*''ஒருவருக்கொருவர் பொறாமை கொள்ளாதீர்கள்! ஒருவருக்கொருவர் பகைமை கொள்ளாதீர்கள்! ஒருவருக் கொருவர் தீய வார்த்தை பேசிக் கொள்ளாதீர்கள். இன்னும் ஒருவருக்கொருவர் வஞ்சகம் கொள்ளாதீர்கள். இன்னும் ஒருவரின் வியாபாரத்தில் மற்றவர் (இடையே புகுந்து) வியாபாரம் செய்யாதீர்கள். நீங்கள் அனைவரும் அல்லாஹ்வின் அடியார்களாகவும் (ஒருவருக்கொருவர்) சகோதரர்களாகவும் இருங்கள்.*

*ஒரு முஸ்லிம் மற்றொரு முஸ்லிமிற்கு சகோதரன். அவன், அவனுக்கு அக்கிரமம் இழைக்கமாட்டான். அவன் அவனை ஏமாற்ற மாட்டான் அவன் அவனை இழிவுபடுத்த மாட்டான்''*

*பின்னர் தம் நெஞ்சை சுட்டிக்காண்பித்து, "இறையச்சம் இங்கே இருக்கிறது" என மும்முறை கூறினார்கள்.*

*''மனிதன் தன் சகோதரனை இழிவாகக் கருதுவதே பெரும் தீங்கிற்குப் போதுமானதாகும். முஸ்லிமின் இரத்தமும், அவனுடைய சொத்தும், அவனுடைய தன் மானமும் மற்றொரு முஸ்லிம் மீது விலக்கப்பட்டுள்ளது" என்றும் இறைத்தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் கூறினார்கள்.*

***அறிவித்தவர்: அபூ ஹுரைரா(ரலி) நூல்: முஸ்லிம்***

*பொறாமையின் தீங்கை விட்டும் இறைவனிடம் பாது காப்புத் தேடுங்கள். இறைவன் தன் அருளால் உங்களைக் காத்துக் கொள்ளட்டும்.*

*பொறாமைக்காரன் பொறாமை கொள்ளும்போது உண்டாகும் தீங்கை விட்டும் (காவல் தேடுகிறேன்).*

**திருக்குர்ஆன் 113:5**

*இரண்டு விஷயங்களில் மட்டும் நீங்கள் பொறாமைப்பட வேண்டும்; கட்டாயமாய் இவற்றில் பொறாமைப்படுங்கள். இது இறைநம்பிக்கையாளனின் பண்பு*

*"இரண்டு பண்புகளைத் தவிர வேறு எதிலும் பொறாமை கொள்ளாதீர்கள். ஒருவர் தமக்கு இறைவன் அளித்த செல்வத்தை அறப்பணியில் அர்ப்பணித்தல். மற்றொருவர் தமக்கு இறைவன் அளித்த ஞானத்தால் (மக்களின் பிரச்சினைகளுக்குத்) அதைக் கற்பித்துக்கொண்டும் இருத்தல்" என இறைத்தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் கூறினார்கள்.*

**அறிவித்தவர்: அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத்(ரலி)**
**நூல்: ஸஹீஹ் அல் புகாரீ, ஹதீஸ் எண்: 7141**

*"ஒருவருக்கொருவர் கோபம் கொள்ளாதீர்கள். பொறாமை கொள்ளாதீர்கள். பிணங்கிக் கொள்ளாதீர்கள். (மாறாக,) அல்லாஹ்வின் அடியார்களே! (அன்பு பாராட்டுவதில்) சகோதரர்களாய் இருங்கள். எந்தவொரு முஸ்லிமும் தம் சகோதரருடன் மூன்று நாள்களுக்கு மேல் பேசாமல் இருப்பது அனுமதிக்கப்பட்டதன்று" என இறைத்தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் கூறினார்கள்.*

**அறிவித்தவர்: அனஸ் இப்னு மாலிக்(ரலி) நூல்: புகாரீ**

## பகைமை வேண்டாம்

*கண்ணாடி உங்களைப் பகைவராகக் கருவதில்லை. நீங்கள் உங்களின் சகோதரரை பகைவராகக் கருதாதீர்கள். அவர் உங்களைப் பகைத்தாலும் நீங்கள் அவரைப்*

*பகைக்காதீர்கள். அவருடன் அன்பாய் உறவாடுங்கள். சிறுசிறு குற்றங்களை மன்னித்து விடுங்கள். சகோதரனுக் காக விட்டுக் கொடுக்கும் மனப்பக்குவத்தை வளர்த்துக் கொள்ளுங்கள். இறைநம்பிக்கையாளர்களுக்குள் பகை இருக்கவே முடியாது. இறைமறுப்பு மற்றும் இணைவைப்பு தான் உங்களுக்கு வெறுப்பையும் பகைமையையும் அளிக்கவேண்டும். அந்தக் கொள்கையைத்தான் நீங்கள் வெறுக்கவேண்டும்.*

*இறைநம்பிக்கையாளர்கள் அனைவரும் சகோதரர்கள்; அவர்களுக்குள் பொறாமை, பகைமை, வஞ்சகம் கூடாது என்பதை இதற்கு முந்தைய பகுதியில் பார்த்தீர்கள். உண்மையில் பகைமை என்பது இஸ்லாமிற்கு முந்தைய நிலையாகும். இஸ்லாமில் நுழைந்த பின் பகைமை இருக்கக்கூடாது.*

*ஏக இறைவனின் கயிற்றை ஒன்றிணைந்து பற்றிப் பிடியுங்கள், பிரிந்துவிடாதீர்கள். உங்களின் மீதுள்ள இறைவனின் அருட்கொடைகளையும் நினைத்துப் பாருங்கள். நீங்கள் பகைவர்களாய் இருந்தபோது உங்களின் இதயங்களை அவன் அன்பினால் பிணைத் தான். எனவே, அவனுடைய அருளால் சகோதரர்கள் ஆனீர்கள். இன்னும், நெருப்பின் விளிம்பின் மீது இருந்தீர்கள். அதை விட்டும் அவன் உங்களைக் காப்பாற்றினான்...* ***திருக்குர்ஆன் 3:103***

*இறைவனுக்கும், அவனுடைய தூதருக்கும் கட்டுப்படுங் கள்; கருத்து வேறுபடாதீர்கள். அவ்வாறாயின் கோழை களாகிவிடுவீர்கள்; உங்களின் பலம் குன்றிவிடும். பொறுமையாய் இருங்கள். பொறுமையாளர்களுடன் உறுதியாய் இறைவன் இருக்கிறான்.* ***திருக்குர்ஆன் 8:46***

*“இறைநம்பிக்கையாளர்கள் ஒருவருக்கொருவர் (ஒற்று மையில்) ஒரு கட்டடத்தைப் போன்றவர்கள் ஆவர். கட்டடத்தின் ஒரு பகுதி மற்றொரு பகுதிக்கு வலு சேர்க்கிறது” என இறைத்தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் கூறி, தம் கை விரல்களை ஒன்றோடொன்று கோர்த்துக் காண்பித்தார்கள்.*

***அறிவித்தவர்: அபூ மூஸா அல்அஷ்அரீ(ரலி)***
***நூல்: ஸஹீஹ் அல் புகாரீ, ஹதீஸ் எண்: 6026***

*இறைநம்பிக்கையாளர்களுக்குள் பிரச்சினையே வராது என்றும் உறுதிபடக் கூறமுடியாது. மனிதன் என்பதால் சற்று முன்பின் இருப்பது யதார்த்தம். அப்படி ஒரு பிரச்சினை எழுந்தால் என்ன செய்யவேண்டும் என்பதையும் இறைவன் கூறுகிறான்.*

*இறைநம்பிக்கையாளர்கள் சகோதரர்களே! எனவே, உங்களின் இரண்டு சகோதரர்களுக்கிடையில் சமாதானம் உண்டாக்குங்கள்! இன்னும், உங்களின் மீது கிருபை செய்யப்படுவதற்காக ஏக இறைவனை அஞ்சுங்கள்.*

***திருக்குர்ஆன் 49:10***

*உங்களின் முந்தைய நிலையை கண்ணாடி தனக்குள் பதித்து வைத்துக் கொள்வதில்லை. பகைமையை மனதில் பதித்து வைக்காதீர்கள். குரோதத்தைத் தூரமாகத் தூக்கி எறியுங்கள். இறைநம்பிக்கையாளர்கள் இரண்டுபேர் பகைமையில் இறைவனைச் சந்திக்க முடியுமா என்பதை நிதானமாக யோசியுங்கள். விட்டுக் கொடுத்தவர் கெட்ட தில்லை; கெட்டுப்போனவர் விட்டுக் கொடுத்ததில்லை என்பதைப் புரிந்து கொள்ளுங்கள். சமாதானக் கை நீட்டுவோரைத் தழுவிக் கொள்ளுங்கள். நீங்கள் உங்களின் சகோதரரிடம் முதலில் சமாதானத்திற்குத் தயாராகுங்கள்.*

*அதுதான் இறைநம்பிக்கையின் உயர்ந்த நிலை. நீங்கள் எப்போதும் உயர்ந்த நிலையில் இருக்கவேண்டும் என நினையுங்கள். உங்களின் சமாதனக் கையைக் கத்தரித்து விடுவோர் குறித்து கவலைப்படாதீர்கள். இறையருள் தான் உங்களுக்குத் தேவை. உங்களைவிட்டும் இறைவன் தன் அருளைத் துண்டித்தாலே நீங்கள் நடுங்க வேண்டும்; கவலைப்பட வேண்டும். நீங்கள் சமாதானத்திற்கு முன் வரும்போது இறைவன் தன் அருளை உங்களுக்குப் பொழிகிறான்.*

*“… எந்தவொரு முஸ்லிமும் தம் சகோதரருடன் மூன்று நாள்களுக்கு மேல் பேசாமல் இருப்பது அனுமதிக்கப் பட்டதன்று’ என இறைத்தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் கூறினார்கள்.*

***அறிவித்தவர்: அனஸ் இப்னு மாலிக்(ரலி)***
***நூல்: ஸஹீஹ் அல் புகாரீ, ஹதீஸ் எண்: 6065***

*இறைத்தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் தம் பணியாளரிடம் கூட கோபம் கொண்ட தில்லை. முதலாளி பணியாளுக்குக் கண்ணாடி என்பதை அவர்கள் உணர்த்தியுள்ளார்கள்.*

*இறைத்தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர் களுக்கு நான் பத்து ஆண்டுகள் பணி புரிந்துள்ளேன். என்னை ‘ச்சீ’ என்றோ, ‘ஏன் செய்தாய்’ என்றோ, ‘நீ செய் திருக்கக் கூடாதா?’ என்றோ அவர்கள் சொன்னதில்லை.*

***அறிவித்தவர்: அனஸ்(ரலி)***
***நூல்: ஸஹீஹ் அல் புகாரீ, ஹதீஸ் எண்: 6038***

*அறிந்தோ அறியாமலோ உங்களின் சகோதரருடன் உங்களுக்கு மனவருத்தம் இருந்தால் அவரின் சிறு குறைகளை மன்னித்து நீங்கள் பேசுவதற்கு முந்துங்கள்.*

அப்படி முந்தினால் உங்களுக்கு நன்மை அதிகம் என்பதைப் புரிந்து கொள்ளுங்கள்.

“ஒருவர் தம் சகோதருடன் (மனவருத்தம் கொண்டு) மூன்று நாள்களுக்கு மேல் பேசாமல் இருப்பது அனுமதிக்கப்பட்டதன்று. அவர்கள் இருவரும் சந்தித்து ஒருவரைவிட்டு ஒருவர் முகத்தைத் திருப்பிக்கொள் கின்றனர். ஸலாமை முதலில் தொடங்குகிறவரே இருவரில் சிறந்தவர்” என இறைத்தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் கூறினார்கள்”.

***அறிவித்தவர்: அபூ அய்யூப் அல் அன்சாரி(ரலி)***
***நூல்: ஸஹீஹ் அல் புகாரீ, ஹதீஸ் எண்: 6077.***

இறை நெறிக்கு மாறு செய்பவருடன் நீங்கள் பேசாமல் இருக்கலாம். அதுவும் அவர் திருந்திக் கொள்ளும் வரைதான். அவர் திருந்தி விட்டால் அவருடன் நீங்கள் அன்பாய் இருக்கவேண்டும்.

நான் (மற்றும் இரண்டு நண்பர்கள் தக்கக் காரணமின்றி தபூக் போரில்) இறைத்தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுடன் கலந்துகொள்ளாமல் பின் வாங்கியபோது, எங்களுடன் பேச வேண்டாம் என இறைத்தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் முஸ்லிம்களுக்குத் தடை விதித்தார்கள் (இவ்வாறு) ஐம்பது நாள்கள் (பேசாமலிருந்தார்கள்).

***அறிவித்தவர்: கஅப் இப்னு மாலிக்(ரலி)***
***நூல்: ஸஹீஹ் அல் புகாரீ, ஹதீஸ் எண்:***

அந்த ஐம்பது நாள்களுக்குப் பின்னர் அவர்கள் அன்பாய் நடத்தப்பட்டார்கள். இவ்வாறுதான் ஒரு முஸ்லிம் இருக்க வேண்டும் என்பதைப் புரிந்து கொள்ளுங்கள்.

# வசைபாடாதீர்கள்

*கண்ணாடிக்கு முன்னால் நீங்கள் நின்றால் அது உங்களை ஏசுவதில்லை; நீங்களும் அதை ஏசமாட்டீர்கள். அப்படி நீங்கள் கண்ணாடியை ஏசினால் உங்களுக்கு வேறுபட்டம் தான் சூட்டப்படும். நீங்கள் உங்களின் சகோதரனுக்குக் கண்ணாடி அவனை ஏசாதீர்கள். தீய வார்த்தைகளால் திட்டாதீர்கள்.*

*''ஒரு முஸ்லிமை ஏசுவது பாவமாகும். அவனுடன் போரிடுவது (கொலை செய்வது), இறைமறுப்பு ஆகும்" என இறைத்தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் கூறினார்கள்.*

***அறிவித்தவர்: அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத்(ரலி)***

***நூல்: ஸஹீஹ் அல் புகாரீ, ஹதீஸ் எண்: 6044***

*"ஒருவர் மற்றவரை 'பாவி' என்றோ, 'இறைமறுப்பாளன்' என்றோ அழைத்தால் அவர் அவ்வாறு இல்லை என்றால், சொன்ன சொல் சொன்னவரை நோக்கியே திரும்பி விடுகிறது" என இறைத்தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் எச்சரித்துள்ளார்கள்".*

***அறிவித்தவர்: அபூ தர்(ரலி)***

***நூல்: ஸஹீஹ் அல் புகாரீ, ஹதீஸ் எண்: 6045***

*கெட்ட வார்த்தைகள் பேசுபவராகவோ, சாபமிடுபவராகவோ, ஏசுபவராகவோ இறைத்தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் இருக்கவில்லை. (ஒருவரைக்) கண்டிக்கும்போது கூட "அவருக்கென்ன நேர்ந்தது? அவரின் நெற்றி மண்ணில் படட்டும்" என்றே கூறிவந்தார்கள்.*

***அறிவித்தவர்: அனஸ் இப்னு மாலிக்(ரலி)***

***நூல்: ஸஹீஹ் அல் புகாரீ, ஹதீஸ் எண்: 6046***

*நீங்கள் உண்மை முஸ்லிம் என்றால் இறைத்தூதரின் வழியைத்தான் பின்பற்றவேண்டும்.*

## இரட்டை வேடம் போடாதீர்கள்

*உங்களிடம் கண்ணாடி இரட்டை வேடம் போடுவதில்லை. உங்களிடம் இருப்பதை நேரடியாகவும், தெளிவாகவும், தயக்கமின்றியும் சொல்லிவிடுகிறது. நீங்கள் போய் விட்டால் உங்களை அது மறந்துவிடுகிறது. மறுபடியும் அதன் முன்பு நீங்கள் வந்து நின்றால் உங்களின் அன்றைய நிலையை மட்டும் பேசுகிறது; முந்தைய நிலை குறித்து அது பேசுவதில்லை. நீங்கள் இல்லாதபோது உங்களைக் குறித்து ஒரு மாதிரியும், நீங்கள் இருக்கும்போது உங்களிடம் ஒரு மாதிரியும் அது நடந்து கொள்வதில்லை.*

*“மறுமை நாளில் அல்லாஹ்விடம் மனிதர்களிலேயே மிகவும் மோசமானவனாய் இரட்டை முகத்தானைக் காண்பீர். அவன் இவர்களிடம் செல்லும்போது ஒரு முகத்துடனும் அவர்களிடம் செல்லும்போது இன் னொரு முகத்துடனும் செல்கிறான்” என இறைத்தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் கூறினார்கள்”.*

***அறிவித்தவர்: அபூ ஹுரைரா(ரலி)***
***நூல்: ஸஹீஹ் அல் புகாரீ, ஹதீஸ் எண்: 6058***

*நீங்கள் உங்களின் சகோதரரிடம் இரட்டை வேடம் போடாதீர்கள். உண்மையில் இது நயவஞ்சகத்தனம் ஆகும். நயவஞ்சகத்தனத்தை இறைவன் அங்கீகரிப்பது இல்லை. நயவஞ்சகன் முழுமையாகத் திருந்தாத வரை இறைவன் அவனை மன்னிக்கவும் மாட்டான்; நரகத்தின் அடித்தட்டில் போட்டு தண்டிப்பான். இதில் மிகவும் கவனமாய் இருங்கள். தங்களை இறைநம்பிக்கையாளர்கள் எனக் கூறும் பலரும் இதற்கு பழியாகிவிடுகிறார்கள்.*

இந்நயவஞ்சகர்கள் நரகத்தின் அடித்தட்டிலேயே இருப் பார்கள். அவர்களுக்கு உதவியாளரைக் காணமாட்டீர்.

**திருக்குர்ஆன் 4:145**

மன்னிப்புக் கேட்டு, திருந்தி, ஏக இறைவனை பலமாகப் பிடித்து, தங்களின் மார்க்கத்தை ஏக இறைவனுக்காகக் கலப்பற்றதாய் ஆக்கியவர்களே இறைநம்பிக்கையாளர் களுடன் இருக்கிறார்கள். மேலும், ஏக இறைவன் இறை நம்பிக்கையாளர்களுக்கு மகத்தான கூலியை அளிப்பான்.

**திருக்குர்ஆன் 4:146**

நயவஞ்சகத் தன்மையை வெளிப்படுத்தும் நான்கு பண்புகள் இருக்கின்றன. அவற்றை ஒருபோதும் உள்வாங்கிக் கொள்ளாதீர்கள்.

‘‘நயவஞ்சகனின் அடையாளங்கள் மூன்று 1. அவன் பேசினால் பொய்யே பேசுவான். 2. அவன் வாக்குறுதி கொடுத்தால் மாறுசெய்வான். 3. அவனிடம் ஒரு பொருள் அல்லது பணி தொடர்பான பொறுப்பு ஒப்படைக்கப் பட்டால் அதில் மோசடி செய்வான்” என இறைத்தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் கூறினார்கள்.

**அறிவித்தவர்: அபூ ஹுரைரா(ரலி)**

**நூல்: ஸஹீஹ் அல் புகாரீ, ஹதீஸ் எண்: 33,34, முஸ்லிம்**

“அவன் சண்டையிட்டால் தீய வார்த்தைகளால் திட்டு வான்’’ என இறைத்தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் கூறினார்கள் என அப்துல்லாஹ் இப்னு உமர் (ரலி) வாயிலாக புகாரீ மற்றும் முஸ்லிமில் உள்ளது.

## தனிமைப் படுத்தாதீர்கள்

கண்ணாடிக்கு முன்பு நீங்கள் மூன்று பேர் நின்றால் உங்கள் மூன்று பேர் குறித்தும் தெளிவாக அது உரைக்

*கிறது. யாரையும் பிரித்து தனியாக அது இரகசியம் பேசுவதில்லை. நீங்கள் மூன்று பேர் இருந்தால் அல்லது ஒரு சபையாக சிலர் இருந்தால் இருவர் மட்டும் அல்லது சிலர் மட்டும் தனித்து நின்று இரகசியம் பேசாதீர்கள். அல்லது சிலர் மட்டும் பிறருக்குத் தெரியாத மொழியில் பேசாதீர்கள். உங்களுக்கு அரபு தெரியும் என்பதற்காக சிலர் மட்டும் அரபு மொழியில் பேசாதீர்கள். நீங்கள் சாதாரணமாகப் பேசினாலும் அது இரகசியமாகக் கருதப்படலாம். பிறர் மனதில் சந்தேகத்தைப் புகுத் தாதீர்கள்; பிறர் மனதைக் காயப்படுத்தாதீர்கள்.*

*"நீங்கள் மூன்றுபேர் இருக்கும்போது மூன்றாம் நபரை விட்டுவிட்டு இருவர் மட்டும் இரகசியம் பேச வேண்டாம்" என இறைத்தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் கூறினார்கள்.*

***அறிவித்தவர்: அப்துல்லாஹ் இப்னு அம்ர்(ரலி)***
***நூல்: ஸஹீஹ் அல் புகாரீ, ஹதீஸ் எண்: 6288***

*"நீங்கள் மூன்று பேர் (ஒன்றாக) இருக்கும்போது மக்களுடன் கலந்துவிடும் வரை மூன்றாம் நபரை விட்டுவிட்டு இருவர் மட்டும் ரகசியமாக எதையும் பேச வேண்டாம். ஏனெனில் அது அவருக்கு வருத்தத்தை ஏற்படுத்தும்" என இறைத்தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் கூறினார்கள்.*

***அறிவித்தவர்: இப்னு மஸ்வூத்(ரலி) நூல்: முஸ்லிம்***

## உறவைப் பேணுங்கள்

*கண்ணாடிக்கு முன்னால் நீங்கள் எத்தனை முறை நின்றாலும் அது உங்களின் உறவை முறித்துக் கொள்வ தில்லை. நீங்கள் உங்கள் இரத்தபந்துக்கள், உறவுக்காரர் கள், நட்பு வட்டங்களை முறித்துக் கொள்ளாதீர்கள்.*

கண்டும் காணாதது போல இருக்காதீர்கள். உங்கள் இரத்த பந்துக்களின் உறவை உங்களால் முறிக்கவே முடியாது. உங்களின் உடன் பிறந்த சகோதரியின் உறவை நீங்கள் முறித்துக் கொண்டாதாய் அறிவித்தால் அவள் உங்களுக்கு மணமுடிக்க அனுமதிக்கப்பட்டுவிடுவாளா என்ன? இறைவன் கொடுத்த உறவு என்றும் மாறாதது; நிலையானது என்பதை மறந்துவிடாதீர்கள்.

உறவுக்காரர்கள் சில நேரங்களில் சில தவறுகள் செய்ய லாம். அவர்களும் மனிதர்களே. தவறு இழைக்காதிருப் பதற்கு அவர்கள் வானவர்கள் அல்லர். தவறுகளை மன்னிக்கும் மனப்பக்குவத்தை ஏற்படுத்திக் கொள்ளுங்கள்.

உங்களின் நட்புவட்டங்கள் சில நேரங்களில் தவறு செய்யலாம். அதைப் பொறுத்துக் கொள்ளுங்கள். நீங்கள் தவறுகளை மன்னித்து மறந்துவிடுவதால் உங்களுக்கு எந்தக் குறையும் ஏற்படப்போவதில்லை.

நான் என் அண்ணனுடன் பத்து ஆண்டுகளாகப் பேசுவ தில்லை என பெருமையுடன் கூறுகிறீர்கள். இது பெருமைப்படும் செயல் அல்ல. உண்மையில் இது உங்களின் பிடிவாதத்தை அல்லது பெருமையை வெளிப் படுத்துகிறது. இந்தப் பிடிவாதமும் பெருமையும் உங்களுக்கு மறுமையில் நன்மை சேர்க்கப்போகிறதா? நரகத்தை விட்டு உங்களைக் காப்பாற்றப்போகிறதா? ஒரு நிமிடம் நிதானமாகச் சிந்தியுங்கள். உண்மையில் அது உங்களைச் சீரழித்துவிடும் என்பதை துளியும் மறந்துவிடாதீர்கள். குறிப்பாக இரத்தபந்துக்களின் உறவை முறித்துக் கொள்வது உங்களை சுவர்க்கத்தில் நுழையவிடாது என்பதை அறிந்து கெள்ளுங்கள்.

“உறவை முறித்து வாழ்பவன் சுவர்க்கத்தில் நுழைய

*மாட்டான்" என இறைத்தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் கூறினார்கள்.*

***அறிவித்தவர்: ஜுபைர் இப்னு முத்யிம்(ரலி)***
***நூல்: ஸஹீஹ் அல் புகாரீ, ஹதீஸ் எண்: 5984***

*''இறைத்தூதர் அவர்களே! என்னைச் சுவர்க்கத்தில் சேர்க்கும் ஒரு செயலை எனக்குக் கூறுங்கள்'' என ஒருவர் இறைத்தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களிடம் கேட்டார்.*

*"இவருக்கென்ன நேர்ந்தது? இவருக்கென்ன நேர்ந்தது?" என மக்கள் கூறினர்.*

*"அவருக்கு ஏதேனும் (அவசரத்) தேவை இருக்கலாம்" என இறைத்தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் கூறினார்கள்.*

*''பின்னர் அவரிடம், 'நீர் ஏக இறைவனை வணங்க வேண்டும்; அவனுக்கு எதையும் இணையாக்கக் கூடாது; (ஐவேளை) தொழுகையையும், ஸகாத்தையும் நிறை வேற்றி வரவேண்டும். உறவைப் பேணி வாழவேண்டும்" எனக் கூறி, ''உம்முடைய வாகனத்தை (உம்முடைய வீட்டின் பக்கம்) செலுத்துவீராக" என்றார்கள்.*

***அறிவித்தவர்: அபூ அய்யூப் அல் அன்ஸாரி(ரலி)***
***நூல்: ஸஹீஹ் அல் புகாரீ, ஹதீஸ் எண்: 5982, 5983***

*இறைத்தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுடன் குறைஷியர் சமாதான ஒப்பந்தம் செய் திருந்த அந்தக் காலத்தில் இணைவைப்பவராய் இருந்த என் தாயார் தம் தந்தையுடன் (என்னைப் பார்க்க) வந்தார்.*

*"என் தாயார் என்னிடம் ஆசையாக வந்துள்ளார்; நான் அவருடன் உறவு கொண்டாடலாமா?" என இறைத்தூதர்*

ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களிடம் தீர்ப்புக் கேட்டேன்.

“ஆம். நீ உன் தாயின் உறவைப் பேணி நடந்துகொள்” என இறைத்தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் கூறினார்கள்.

**அறிவித்தவர்: அஸ்மா பின்த் அபீ பக்ர்(ரலி)**
**நூல்: ஸஹீஹ் அல் புகாரீ, ஹதீஸ் எண்: 5979**

இறைத்தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் ஏகத்துவப் பிரச்சாரத்தில் உறவுகளைப் பேணி நடக்க வேண்டும் என்பதும் வலியுறுத்தப்பட்டு வந்தது என்பதைப் புரிந்து கொள்ளுங்கள். இதை அன்றைய இறைமறுப்பாளர்கள் கூட அறிந்திருந்தார்கள்.

(பைஸாந்தியப் பேரரசர்) ஹெராக்ளியஸ் (மக்கா வாசிகளின் வணிகர்களில் ஒருவனாக) என்னை அழைத்து வர ஆள் அனுப்பினார். (நான் அவரிடம் சென்றேன்.) அப்போது ஹெராக்ளியஸ், ‘‘அவர் (இறைத்தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) உங்களுக்கு என்ன தான் போதிக்கிறார்?” எனக் கேட்டார். நான், “தொழுகை, தர்மம், கற்பு நெறி, உறவைப் பேணி வாழ்தல் முதலிய பண்புகள் குறித்து எங்களுக்குக் கட்டளையிடுகிறார்” என பதில் அளித்தேன்’’ என அபூ சுஃப்யான்(ரலி) கூறினார். **அறிவித்தவர்: இப்னு அப்பாஸ்(ரலி)**
**நூல்: ஸஹீஹ் அல் புகாரீ, ஹதீஸ் எண்: 5980**

இறைவனின் அருள் உங்களுக்கு வேண்டும் என்றால் நீங்கள் உறவுவைக் காத்து நடக்க வேண்டும். நீங்கள் உறவைத் துண்டிக்கும்போது இறையருள் உங்களுக்கு கிடைக்காமல் போய்விடலாம். எச்சரிக்கையாய் இருங்கள்.

*“தம் வாழ்வாதாரம் விசாலமாக்கப்படுவதும் வாழ்நாள் நீட்டிக்கப்படுவதும் யாருக்கு மகிழ்ச்சி அளிக்குமோ அவர் தம் உறவைப் பேணி வாழட்டும்” என இறைத்தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் கூறினார்கள்.*

***அறிவித்தவர்: அபூ ஹுரைரா(ரலி)***
***நூல்: ஸஹீஹ் அல் புகாரீ, ஹதீஸ் எண்: 5985***

*“தம் வாழ்வாதாரம் (ரிஸ்க்) விசாலமாக்கப்படுவதையும் வாழ்நாள் நீட்டிக்கப்படுவதையும் விரும்புகிறவர் தம் உறவைப் பேணி வாழட்டும்'' என இறைத்தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் கூறினார்கள்.*

***அறிவித்தவர்: அனஸ் இப்னு மாலிக்(ரலி)***
***நூல்: ஸஹீஹ் அல் புகாரீ, ஹதீஸ் எண்: 5986***

*''அல்லாஹ் படைப்பினங்களை படைத்து முடித்த போது, ‘உறவுகளைத் துண்டிப்பதிலிருந்து உன்னிடம் பாதுகாப்புக் கோரியே நான் இப்படி நிற்கிறேன்” என உறவு எழுந்து கூறியது.*

*‘ஆம். உன்னைப் பேணி நடப்பவனுடன் நான் நல்ல முறையில் நடந்துகொள்வேன் என்பதும், உன்னைத் துண்டிப்பவனை நான் துண்டித்துவிடுவேன் என்பதும் உனக்குத் திருப்தி அளிக்கவில்லையா?” என இறைவன் கேட்டான்.*

*“ஆம் (திருப்தியே) என் இறைவா!” என உறவு கூறியது.*

*“இது உனக்காக நடந்தே தீரும்’ என இறைவன் கூறினான்” என்று இறைத்தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் கூறினார்கள்.*

*அதன் பின்னர், “நீங்கள் பின்வாங்கிக் கொண்டு பூமியில் குழப்பம் விளைவிக்கவும், உங்கள் உறவுகளைத் துண்டித்து*

*விடவும் முனைகிறீர்களா?" எனும் (திருக்குர்ஆன் 47:22) வசனத்தை நீங்கள் விரும்பினால் ஓதிக்கொள்ளுங்கள்" என்றும் இறைத்தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் கூறினார்கள்.* ***அறிவித்தவர்: அபூ ஹுரைரா(ரலி)***

***நூல்: ஸஹீஹ் அல் புகாரீ, ஹதீஸ் எண்: 5987***

*உறவு என்பதற்கு அரபு மொழியில் 'ரஹிம்' என்று சொல்லப்படும். கருவறைக்கு 'ரஹம்' என்று சொல்லப் படும். இறைவனின் பெயர் 'ரஹ்மான்', 'ரஹீம்' என்பதாகும். இறைவனின் இந்தப் பெயர்களில் இருந்துதான் 'ரஹம்' என்னும் வார்த்தையும் ரஹிம் என்னும் வார்த்தையும் பிறந்துள்ளது. எனவே உறவு என்பது தொப்புள் கொடி உறவு என்பதையும் அதற்கு இறைவன் தன் பெயரையே வைத்துள்ளான் என்பதைப் புரிந்து கொள்ளுங்கள்.*

*''உறவு (ரஹிம்) என்பது, அளவிலா அருளாளன் (ரஹ்மான்) இடமிருந்து வந்துள்ள கிளையாகும். எனவே, இறைவன் (உறவை நோக்கி) 'உன்னோடு ஒட்டி வாழ்பவனுடன் நானும் உறவுபாராட்டுவேன். உன்னை முறித்துக் கொள்பவனை நானும் முறித்துக் கொள்வேன்" என்றான்' என இறைத்தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் கூறினார்கள்.*

***அறிவித்தவர்: அபூ ஹுரைரா(ரலி)***

***நூல்: ஸஹீஹ் அல் புகாரீ, ஹதீஸ் எண்: 5988, 5989***

*உறவைப் பசுமையாக்கிக் கொண்டே இருங்கள். உங்கள் உறவுக்காரர் உங்களுக்கு ஒரு நன்மை செய்தால் அதற்குப் பதிலாக எதாவது செய்தாகவே வேண்டுமே என்ற அடிப்படையில் பெருமைக்காக எதையும் செய்யாதீர்கள். உங்களால் முடிந்தவரை உங்களின் உறவுக்காரர்களிடம் நன்மையில் முந்துங்கள். உங்களை*

*யாரும் குறைகூறிவிடக்கூடாது என பிறருக்காக எதையும் செய்யாதீர்கள். உண்மையான பாசத்துடன் நன்மைகளைச் செய்யுங்கள். அல்லது இறைவனின் கட்டளை, நான் இறைநம்பிக்கையாளன், நான் இப்படித் தான் இருந்தாக வேண்டும். இல்லை என்றால் என் இறைவனிடம் நாளை மறுமையில் பதில் சொல்லியாக வேண்டும் என்ற அடிப்படையில் செய்யுங்கள். சிறந்த செயல் என்பது இறையச்சம் மற்றும் பாசத்தோடு எதையும் செய்வதாகும்.*

*"பதிலுக்கு பதில் உறவாடுகிறவர் உறவைப் பேணுகிறவர் அல்லர்; மாறாக உறவு முறிந்தாலும் அந்த உறவுடன் இணைகிறவரே உறவைப் பேணுபவராவார்" என இறைத் தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் கூறினார்கள்.*

***அறிவித்தவர்: அப்துல்லாஹ் இப்னு அம்ர்(ரலி)***

***நூல்: ஸஹீஹ் அல் புகாரீ, ஹதீஸ் எண்: 5991***

## பொறுமையாளராய் இருங்கள்

*நீங்கள் கண்ணாடியின் முன்னால் நிற்கும்போது அது, உங்களிடம் கோபத்துடனும் பிறரிடம் பொறுமை யுடனும் நடந்து கொள்வதில்லை. அதன் முன்னால் யார் நின்றாலும் ஒரே மாதிரியாகத்தான் அது நடந்து கொள் கிறது. நீங்கள் உங்களின் சகோதரர்களில் யாரைச் சந்தித்தாலும் கண்ணாடியைப் போன்றே நடந்து கொள்ளுங்கள். ஒருவரிடம் கடுகடுப்புடனும் மற்றவரிடம் கலகலப்புடனும் நடந்து கொள்ளாதீர்கள்; இது முறை யாகாது. நீங்கள் உங்களின் சகோதரருக்குக் கண்ணாடி என்றால் உங்களைப் பொறுத்தவரையில் எல்லோரும் உங்களுக்குச் சமம் என்பதை மறந்துவிடாதீர்கள். உங்கள் மனோஇச்சைக்குக் கட்டுப்பட்டவராய் இவர்*

*எனக்குப் பிடித்தவர்; அவர் எனக்குப் பிடிக்காதவர் என யாரையும் தரம் பிரிக்காதீர்கள். இவ்வுரிமை உங்களுக்குக் கொடுக்கப்படவில்லை.*

*கோபத்தைத் தவிர்த்து எல்லோருடனும் பொறுமையாக நடந்து கொள்ளுங்கள். நிச்சயமாக இதற்கு பெரும் பலன் இருக்கிறது. மறுமையில் பெரும் பலன் கிடைப்பது மட்டுமல்லாமல் இம்மையிலும் சில பலன்களை நீங்கள் அடைவீர்கள்.*

*நம்பிக்கையாளர்களே! பொறுமையுடன் இருங்கள்! சகித்துக் கொள்ளுங்கள்! வலுப்படுத்திக் கொள்ளுங்கள்! இறைவனை அஞ்சுங்கள்! வெற்றியடைவீர்கள்!*

***திருக்குர்ஆன் 3:200***

*பொறுமை மற்றும் தொழுகையின் மூலம் உதவி தேடுங்கள். உண்மையில் உள்ளச்சம் உடையோரைத் தவிர (மற்றவருக்கு) இது பெரும் பாரமாகவே இருக்கும்.*

***திருக்குர்ஆன் 2:45***

*இறைநம்பிக்கையாளர்களே! பொறுமை மற்றும் தொழுகையின்மூலம் (இறைவனிடம்) உதவி தேடுங்கள்! பொறுமையாளர்களுடன் ஏக இறைவன் இருக்கிறான்.*

***திருக்குர்ஆன் 2:153***

*உங்களுக்குத் ஒரு துன்பம் வரும்போதுதான் நீங்கள் பொறுமையாளரா இல்லையா என்பதைச் சோதிக்க முடியும். எதுவுமே ஏற்படாதிருக்கும்போது நீங்கள் பொறுமையாளராகத்தான் இருப்பீர்கள். அது ஒரு சாதனை அல்ல. இறைவனின் சோதனை மற்றும் பிறரிடம் இருந்து ஏற்படும் துன்பங்களைச் சகித்துக் கொள்ளுங்கள்.*

*“பொறுமை என்பது துன்பம் ஏற்பட்ட உடன் (கைக் கொள்வதே)” என இறைத்தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் கூறினார்கள்.* ***அறிவித்தவர்: அனஸ்(ரலி)***

***நூல்: ஸஹீஹ் அல் புகாரீ, ஹதீஸ் எண்: 1469 1302***

*எனக்கு பொறுமையே இல்லை; என்னால் எதையும் பொறுத்துக் கொள்ளமுடியாது என்ற எண்ணத்தைத் தூக்கி எறியுங்கள். நீங்கள் பொறுமையாளராய் இருக்க வேண்டுமென விரும்பினால் இறைவன் வழிவகுப்பான்.*

*“...பொறுமையை மேற்கொள்ள முயற்சிப்பவனை பொறுமையாளனாகவே இறைவன் ஆக்கிவிடுகிறான். பொறுமையைவிடச் சிறந்த விசாலமான அருட்கொடை எவருக்கும் கொடுக்கப்படுவதில்லை” என இறைத்தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் கூறினார்கள்.*

***அறிவித்தவர்: அபூ ஸயீத் அல்குத்ரீ(ரலி)***

***நூல்: ஸஹீஹ் அல் புகாரீ, ஹதீஸ் எண்: 1469***

## குற்றத்தை ஒப்புக் கொள்ளுங்கள்

*நீங்கள் கண்ணாடிக்கு முன்னால் நிற்கும்போது அது உங்களின் குறைகளை எடுத்துக் காட்டுகிறது. அப்போது, என்னையா குற்றம் சுமத்துகிறாய் என கண்ணாடியை நீங்கள் அடித்து உடைத்து விடுவதில்லை. கண்ணாடி யுடன் வாதிடுவதில்லை. அதன் மீது கோபம் கொள்வ தில்லை. இப்படி எல்லாம் நீங்கள் செய்தால் உங்களுக்கு ஏதோ ஆகிவிட்டது என்றே பிறர் முடிவுக்கு வருவார்கள். உங்களிடம் காணப்படும் குறைகளை அது எடுத்துரைக்கும் போது முழுமனதுடன் நீங்கள் அவற்றை ஒப்புக் கொள் கிறீர்கள். அப்போது நீங்கள் மழுப்புவதில்லை. அல்லது குறை இருந்தால் என்ன; இல்லாவிட்டால் என்ன என்று கண்டுகொள்ளாமலும் இருப்பதில்லை.*

*உங்களின் சகோதரனுக்கு கண்ணாடியாய் இருக்கிறீர்கள் என்பதுபோல உங்களின் சகோதரரும் உங்களுக்குக் கண்ணாடியாய் இருக்கிறார். அவரிடம் காணப்பட்ட குறைகளை நீங்கள் எடுத்துரைத்தபோது அவர் திருந்த வேண்டும் என நீங்கள் விரும்பினீர்கள். இப்போது உங்களிடம் காணப்படும் குறைகளை அவர் எடுத்துரைக் கிறார். நீங்கள் திருந்த வேண்டும் என அவர் விரும்பு கிறார். எனவே, அவர் எடுத்துரைக்கும் குறைகள் அவை உண்மையாக இருக்கும் பட்சத்தில் மாசற்ற மனதுடன் ஒப்புக்கொள்ளுங்கள். வாதிடாதீர்கள்; நியாயப்படுத்த முயலாதீர்கள்; சண்டையிடாதீர்கள்; உங்களின் குற்றங் களை நீங்கள் ஒப்புக் கொள்ளும் பக்குவம் உங்களிடம் வந்துவிட்டால் நீங்கள் உயர்ந்துவிடுவீர்கள். அதன் பிறகு உங்களை இறைவனைத் தவிர யாராலும் வீழ்த்தமுடியாது.*

## பாவங்களை பகிரங்கப்படுத்தாதீர்கள்

*கண்ணாடிக்கு முன்னால் நீங்கள் நிற்கும்போது கண்ணாடி மறைத்திருக்கும் தன்னுடைய குற்றங்களை உங்களிடம் பகிரங்கப்படுத்துவதில்லை. நான் என் குற்றங்களை ஒப்புக் கொள்கிறேன் என்ற பெயரில் நீங்கள் மறைவில் செய்யும் குற்றங்களை நீங்களாக முன்வந்து வெளிப்படுத்தாதீர்கள். நீங்கள் மறைவாகச் செய்யும் பாவங்களை இறைவன் மன்னித்து விடுகிறான். அதற்காக இறைவனிடம் பாவமன்னிப்புக் கோரி திருந்துங்கள். மீண்டும் அக்குற்றத்தைச் செய்யத் துணியா தீர்கள். உங்கள் குற்றங்களை நீங்களாக வெளிப்படுத்துவது பிறரையும் அதுபோன்ற குற்றங்களைச் செய்யத் தூண்டலாம். அது உங்களுக்கு தண்டனையை அளித்துவிடும்.*

*''என் சமுதாயத்தாரில் (பாவம் செய்த) அனைவரும் (இறைவனால்) மன்னிக்கப்படுவர்; (தம் பாவங்களைத்) தாமே பகிரங்கப்படுத்துகிறவர்களைத் தவிர ஒருவர் இரவில் ஒரு (பாவச்) செயல் புரிந்துவிட்டுப் பிறகு காலை யானதும் அல்லாஹ் அவனுடைய பாவத்தை (பிறருக்குத் தெரியாமல்) மறைத்துவிட்டிருக்க, 'இன்னாரே! நேற்றிரவு நான் (பாவங்களில்) இன்னின்னதைச் செய்தேன்" என அவனே கூறுவது பகிரங்கப்படுத்துவதில் அடங்கும். (அவன் செய்த பாவத்தை) இரவில் (பிறருக்குத் தெரியா மல்) இறைவன் மறைத்துவிட்டான். (ஆனால்,) இறைவன் மறைத்ததைக் காலையில் அந்த மனிதன் தானே வெளிச்ச மாக்கி விடுகிறான்" என இறைத்தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் கூறினார்கள்.*

***அறிவித்தவர்: அபூ ஹுரைரா(ரலி)***
***நூல்: ஸஹீஹ் அல் புகாரீ, ஹதீஸ் எண்: 6069***

*''உங்களில் ஒருவர் தம் இறைவனை (மறுமையில்) நெருங்குவார். எந்த அளவிற்கு என்றால் இறைவன் தன் திரையை அவரின் மீது போட்டு (அவரை மறைத்து) விடுவான்.*

*''நீ (உலகத்தில்) இன்னின்ன (பாவச்) செயல்களைச் செய்தாயா?" என இறைவன் கேட்பான்.*

*"ஆம்" என அவர் கூறுவார்.*

*"இன்னின்ன (பாவச்) செயல்களைச் செய்தாயா?" என இறைவன் (மீண்டும்) கேட்பான்.*

*"ஆம்" என அவர் கூறி தம் (பாவச்) செயல்களை ஒப்புக் கொள்வார்.*

*"இவற்றையெல்லாம் உலகில் நான் (பிறருக்குத் தெரியா மல்) மறைத்திருந்தேன். இன்று அவற்றிலிருந்து உன்னை*

*மன்னித்துவிடுகிறேன்' என இறைவன் கூறுவான்" என்று இறைத்தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் கூறினார்கள்.* ***அறிவித்தவர்: இப்னு உமர்(ரலி)***

***நூல்: ஸஹீஹ் அல் புகாரீ, ஹதீஸ் எண்: 6070***

## குற்றத்திற்காக வருந்துங்கள்! திருந்துங்கள்!!

*கண்ணாடிக்கு முன்னால் நீங்கள் நின்று, அது உங்களின் குறையை எடுத்துரைத்தால் உடனடியாக அதைத் திருத்திக் கொள்வதற்குத் தயாராகிறீர்கள். உங்களின் சகோதரர் உங்களுக்குக் கண்ணாடி, அவர் உங்களிடம் காணப்படும் குறையைச் சுட்டினால் முழுமனதுடன் அதை ஏற்றுக் கொண்டு திருத்திக் கொள்வதற்குத் தயாராகுங்கள். வருத்தப்படுவது மட்டும் தீர்வாகாது. திருந்துவதுதான் தீர்வாகும். ஆனால், மனம் உடைந்து விடாதீர்கள்; நிராசையடைந்துவிடாதீர்கள்.*

*மனிதன் தவறு செய்யக்கூடியவன்தான். நீங்கள் தவறே செய்யாமல் வாழமுடியாது. அப்படியானால் நீங்கள் வானவராகத்தான் இருக்க வேண்டும். எனவேதான் இறைத்தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் பின்வருமாறு கூறினார்கள்.*

*"ஆதமுடைய மக்கள் அனைவரும் தவறு செய்யக் கூடியவர்களே! அவர்களில் சிறந்தவர்கள் தம்முடைய பாவங்களுக்காக மனம் வருந்தி திருந்துபவர்கள் ஆவர்" என இறைத்தூதர் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் கூறினார்கள்.* ***அறிவித்தவர்: அனஸ்(ரலி)***

***நூல்: திர்மிதீ மற்றும் இப்னு மாஜா***

*இறையருளைவிட்டும் நிராசை அடைந்து விடாதீர்கள். இறைவன் பாவங்களை மன்னிப்பவன்; கருணையாளன்.*

*“தமக்குத்தாமே தீங்கிழைத்துள்ள என் அடியார்களே! ஏக இறைவனின் அருளில் நம்பிக்கையிழக்காதீர்கள்! ஏக இறைவனே பாவங்கள் அனைத்தையும் மன்னிக்கிறான். அவனே மிக்க மன்னிப்பவன்; நிகரற்ற கருணையாளன்” எனக் கூறும்.*

*எனவே, (மனிதர்களே!) உங்களுக்கு தண்டனை வரும் முன்னரே நீங்கள், உங்கள் இரட்சகனின்பால் திரும்பி, அவனுக்கே முற்றிலும் வழிபடுங்கள்! (தண்டனை வந்த) பின்னர் உதவப்பட மாட்டீர்கள்.*

***திருக்குர்ஆன் 39:53, 39:54***

## புரட்சியின்றி புதிய உலகம்

*இன்றைய உலகம் பொறாமை, போட்டி, வஞ்சகம், பகைமை, சுயநலம் முதலியவற்றால் சூழ்ந்துள்ளது. மனிதன் மனிதனை அழித்தொழிக்கும் அவல நிலைக் காணப்படுகிறது. மனிதம் மதிக்கப்படுவதில்லை. அன்பு பரிமாற்றங்கள் நாளுக்கு நாள் குறைந்து வருகிறது. பொருள் முதல்வாதமே மனிதனின் குறிக்கோளாய் உள்ளது. மனிதன் மனிதனாக வாழ்வதற்கும் அனுமதிக் காமல் அமைதிக்கு எதிராக எதிர்ப்பலை வீறுநடை போடுகிறது.*

*அமைதியை நிலைநிறுத்துகிறோம் என்ற பெயரில் ஒரு நாடு இன்னொரு நாட்டின் மீது படை எடுப்பதும், அங்குள்ள குழந்தைகள், பெண்கள், நோயாளிகள், வயோதிகர்களைக் கொன்று குவிப்பதும் அந்நாட்டு வளங்களை கொள்ளையடிப்பதும் இன்று சர்வ சாதரணமாகிவிட்டது. இந்நிலை மாறுமா என பாதிப் பிற்குள்ளான நெஞ்சங்கள் பரிதவிக்கின்றன.*

மனிதன் இப்படித்தான் வாழவேண்டும் என்பது மறைந்து எப்படியும் வாழலாம் என்ற மனநிலைக்கு மனிதர்கள் மாற்றப்பட்டுவருகிறார்கள். வாழும் கலை மனிதனுக்குத் தெரிவதில்லை. மனிதத்தை அழித்தொழிக்கும் கலைதான் இன்று கொடிகட்டிப் பறக்கிறது. இந்த நிலையை மாற்றியமைப்பதற்கு ஒரு புரட்சி தேவை என சூலுரைக் கப்படுகிறது. அமைதிவேண்டும் ஒரு கூட்டம் அமைதியைக் கெடுத்து வருகிறது. உலக அமைதிக்கு உத்திரவாதம் தனி மனிதனின் மாற்றத்தில்தான் இருக்கிறது. தனி மனிதன் மாறும்போது அவன் சார்ந்துள்ள குடும்பம் மாறுகிறது. அவனுடைய குடும்பம் மாறும்போது அவன் வசிக்கும் பகுதி மாறுகிறது. அவன் வசிக்கும் பகுதி மாறும்போது அவன் வசிக்கும் நாடு மாறுகிறது. இப்படி ஒவ்வொரு மனிதனும் தன் குடும்பம் தன் பகுதி என மாற்றத்திற்குத் தயாராகும்போதுதான் உலகமே மாற்றத்திற்குத் தயாராகும். இந்த மகத்தான மாற்றம் அமைதியாக நடப்பதற்கு நீங்கள் உங்களின் பங்காக பிறரை உங்களின் கண்ணாடியாய் நீங்கள் ஆக்கிக் கொள்ளுங்கள். நீங்களும் பிறருக்குக் கண்ணாடியாய் இருங்கள். வெற்றி நிச்சயம். புரட்சியின்றி நாம் ஒரு புதிய உலகத்தை உருவாக்கலாம்; இறைவன் நாடினால்.

****************